# கல்கி

பம்பாய்த் தமிழர்
சிறப்பிதழ் — II

KALKI
10.8.86
ரூ. 1.50





**நேற்று ஹேமா;**
**இன்று ரேகா;**
**நாளை மீனாட்சி?**

**வருடங்கள் யுகங்களானாலும், என்றென்றும் ரம்மியமான கலைப்படைப்புகள்.**

'பவளப் பூ' — மாசுமறுவற்ற பொன் நாரினில் தொடுக்கப்பட்ட செம்பவளத்தில் செதுக்கி எடுத்த பூக்கள். லலிதாவின் கலைப்படைப்புகளில் ஒன்று.

இதுவும், நுண்ணிய வேலைப்பாடு கொண்ட 2500க்கும் மேற்பட்ட லலிதாவின் தங்க, வைர, வெள்ளி கலைப்படைப்புகள் ஒவ்வொன்றும் உங்கள் அழகுக்கு ஓர் ஆராதனை.




லலிதா ஜுவெல்லரி மார்ட் பி. லிட்.,
123, உஸ்மான் ரோடு, பனகல் பார்க்,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 445939 / 442601.

Vividize 238

# விலை கொடுத்து வாங்குவது வம்பா, வசதியா?

பம்பாயில் வேலை தேடிக் கொண்டு முதன் முதலில் வந்து சேருபவர்களுக்கு — அதுவும் அத்தை, மாமா, சித்தி, பாட்டி என்று யாரேனும் உறவினர்கள் இல்லாத கட்டை பிரம்மச்சாரிகளுக்கு (உறவினர்கள் இருந்தாலும், இவர்களை வைத்துக் கொண்டு குப்பை கொட்டத் தயாராயிருக்கிறார்களா என்பது வேறு விஷயம்) தங்குமிடம் ஒரு மாபெரும் பிரச்னை.

இடநெருக்கடியும் விலைவாசி உயர்வும் இணைந்து உருவாக்கிய இப்பிரச்னையை ஒட்டியே பம்பாயில் 'பேயிங் கெஸ்ட்' முறை ஏற்பட்டது. 'கெஸ்ட்டாகத்' தங்கும் நபர், அவரை வைத்துக் கொண்டிருக்கும் 'ஹோஸ்ட்' (விருந்து படைப்பவர்) இருவருக்குமே பயனுள்ளதாக அமையும் ஏற்பாடு இது. அதாவது, கெஸ்ட்டுக்கு இனிமையான சூழலில் நிம்மதியான வீட்டுச் சாப்பாடு; 'ஹோஸ்ட்'டுக்கும் அதிக சிரமமின்றி நல்ல நண்பரால் உபரி வருமானம். ஆனால் நடைமுறையிலோ...? சில ஹோஸ்டுகளும் கெஸ்டுகளும் இங்கே மனம் திறந்து பேசுகிறார்கள்:



ஸ்ரீநிவாஸ் ஷனி சொல்கிறார்:

ஆபீஸில் திவாகர் பாய் என்றொரு நண்பர். தங்க இடமின்றி நான் பட்ட கஷ்டத்தைக் கேள்விப்பட்டு, தன் வீட்டில் 'பேயிங் கெஸ்டாக' இருக்க அனுமதித்தார்.

அங்கே போனதும்தான் அந்த மனிதர் எவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்று தெரிந்தது. ஸ்கூலுக்குப் போகும் பையன் ஒரு பக்கம், போலியோ தாக்குதலில் கால்களை இழந்த குழந்தை மறுபக்கம்; இதனால் அரைப் பைத்தியமாகி, போலியோ ட்ரீட்மெண்ட்டுக்காகப் பாதி நாள் லாங்கிலியிலும், மீதி நாள் பம்பாயிலுமாகக் கழித்துக் கொண்டிருக்கும் மனைவி இன்னொரு பக்கம்!

வீட்டு வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு அவர்களுக்கு உதவ ஆரம்பித்தேன். ஆக பேயிங் கெஸ்ட் என்று ஆரம்பித்தது பாசப் பிணைப்பாக முடிந்தது.



ராஜு சொல்லும் கதையே வேறு:

இங்கே குர்லாவில் 'பேயிங் கெஸ்டாக'



தங்க நானூற்றைம்பது ரூபாய் கொடுக்கிறேன். இந்தப் பணத்தை நான் அவர்களுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக, அவர்கள் என்னிடம் வாங்கும் வேலைகளுக்கு மாசச் சம்பளமாக நானூற்றைம்பது ரூபாய் போட்டுக் கொடுக்கலாம். எலெக்ட்ரிக் பில் கட்டுவதிலிருந்து, பாங்குக்கு, லாண்டரிக்கு, புத்தகக் கடைக்கு காய்கறி மார்க்கெட், மளிகைக் கடைக்கு என்று நைஸாக ஒவ்வொரு வேலையாகத் தலையில் கட்டுவாள் வீட்டுக்காரக் கிழவி. வீடு திரும்பக் கொஞ்சம் லேட்டாயிற்றென்றால் போச்சு; மாமியார்த்தனமான பார்வைகள், கேள்விகள். 'டாண்' என்று ஒன்பது மணிக்கு ஆஜராகிவிட வேண்டும். இல்லாவிட்டால் 'ஜில்' லென்று காய்ந்து போன நாலு சப்பாத்தியும், விறைத்த சோறும், ஒரு தண்ணி 'தாலு'ம் என் கட்டிலுக்கருகே மூடி வைக்கப்பட்டிருக்கும். இருக்கும் ஒரே பாத்ரூமில் காலையில் கிழவி புகுந்தால், வெளியே வருவதற்குள் அடுத்த நாள் விடிந்துவிடும். முக்கால் வாசி சாயங்காலக் குளியல்தான்!

இத்தனை கஷ்டப்பட்டுக் கொண்டு யார் அங்கே இருக்கச் சொல்கிறார்கள் என்கிறீர்களா? என்ன செய்வது. டோம்பிவிலியைத் தாண்டிய இடத்துக்குக் கூட பத்தாயிரம் பதினைந்தாயிரம் டெபாஸிட் கேட்கிறார்களே!

## விஜயலட்சுமியின் விசனம்

''ஏதோ என் நெருங்கிய உறவினருடைய 'பாஸின்' பிள்ளை என்பதால் இந்தப் பிள்ளையை என் வீட்டில் தங்க அனுமதித்தேன். அது இப்படிப் பேயாய்ப் படுத்துமென்று யார் கண்டது? வாசற்கதவு சாவியை இதோடு மூன்று முறை தொலைத்துவிட்டான். ஒவ்வொரு முறையும் காட்ரெஜ் பூட்டை ரிப்பேர் செய்வதென்பது சாமானியமா?

'நாங்கள் தூங்கி ஒரு ஜாமம் ஆன பிறகு ஊரெல்லாம் சுற்றிவிட்டு ஆற அமர வந்து 'டர்' ரென்று பஸ்ஸரை அழுத்துவான். சதா, மாமி, துமாரா இட்லி சாம்பார் பஹுத் அச்சா ஹை' என்று மஸ்கா அடித்துச் சாப்பிடுவான். சாம்பார் வைத்தால் அவனுக்கென்று ஒரு குடம் தனியாக வைக்க வேண்டும்.

அவனுடைய ரூமை அவனும் சுத்தம் செய்ய மாட்டான்; வீட்டு வேலைக்காரியை அனுப்பினாலும் எரிந்து விழுவான். துணிகள் தோய்க்கப்படாமல் அப்படியே மூட்டை மூட்டையாக 'ஸெண்ட்' மணம் பரப்பிக் கொண்டு சுருட்டி வைக்கப்பட்டிருக்கும்.

சதா டீக்கடை போல் 'மைக்கேல் ஜாக்ஸனை'யும் 'ஆஷா கிஷோரை'யும் அலற விடுவான். குழந்தைகள் படிப்பைப் பற்றிச் சொன்னால் 'இந்தக் காலத்தில் படித்துப் பட்டம் பெறுவதால் ஆவது ஒன்றுமில்லை' என்ற வியாக்கியானம் வேறு.

ஏன் அடித்து விரட்டவில்லை என்கிறீர்களா? என்னவோ பழகிவிட்டான். மனத்தளவில் நல்லவன்தான். எனக்கு உடல்நலமில்லையென்றால் அக்கறையாக விசாரிப்பான்; குழந்தைகளிடமும் 'தோஸ்'தாகி விட்டான். என்னவோ விளையாட்டுப் புத்தி! போகப் போகச் சரியாகிவிடாதா?

— சரண்யா

---

## அடுத்த இதழ்

அண்ணா மாவட்டத்தில் கல்கி — 1



* கொடைக்கானல் ஹீரோ குர்னிகால் சிங் — ஒரு சந்திப்பு

* காந்தி கிராமத்திலும் சில சுசமுசாக்கள்!

* வாழைக்கு வந்த எய்ட்ஸ்!

* இவர்களிடமிருந்து ஒரு கடிதம்!




● டாக்டர் பி. கே. ஐயங்கார்.

# அணுவைப் பிளக்கும் ஐயங்கார்!

# நிலாக் கல்லை ஆராயும் வி.எஸ்.வி

பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில் உயர்மட்டப் பதவிகளில் இரண்டாவது இடத்தைப் பெற்றுப் பெரும் பொறுப்புடன் பணியாற்றி வருபவர் டாக்டர் பி. கே. ஐயங்கார். இவர் மேல்நாடு செல்லாது இந்தியாவிலேயே படித்துத் தம் திறமையை வளர்த்துக் கொண்டு உயர்ந்தவர்.

திருநெல்வேலி மாவட்டத்தில் கொடுகநல்லூரில் பிறந்து, திருவனந்தபுரத்தில் எம்.எஸ்.ஸி. பட்டம் பெற்று, பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில் டாக்டரேட் பெற்றவர் என்ற முறையில் மூன்று மாநிலங்களை இணைக்கிறவர்.

டாடா இன்ஸ்டிடியூட்டில் அணு ஆராய்ச்சியைத் தொடங்கிய இவர், ஆசியாவிலே முதல் அணு ரியாக்டரான 'அப்ஸரா'வில் 1958 இல் நியூட்ரான் ஸ்பெக்ட்ரோ மீட்டர்களை அமைத்தார். உலக விஞ்ஞானிகள் டாக்டர் ஐயங்காரின் நியூட்ரான் சிதறல் நுணுக்கங்களைப் பயன்படுத்த ஆரம்பித்தனர். இத்துறையில் இவரது சேவை சாந்தி ஸ்வரூப் பட்நகர் விருதைப் பெற்றுத் தந்தது.

இன்று பாரதம் அணு ஆராய்ச்சி, அணு மின் நிலையம் அமைத்தல் ஆகியவற்றில் வேறு நாடுகளைச் சாராது சுயச் சார்புடன் விளங்குவதற்கு டாக்டர் ஐயங்காரும் ஒரு காரணம்.

1975 இல் டாக்டர் ஐயங்காருக்கு இந்திய அரசு பத்மபூஷண் விருதை அளித்துக் கௌரவித்தது.

பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் நிறையப் பேர் பணியாற்றுகிறார்கள். இதன் தலைவர் ராஜா ராமண்ணா கூட சென்னை கிறிஸ்துவக் கல்லூரி மாணவரே! டாக்டர் சிதம்பரம், டாக்டர் எஸ். எம். சுந்தரம், டாக்டர் கே. சுந்தரம், என். சீனிவாசன் போன்ற விஞ்ஞானிகள் தமிழ் நாட்டுக்குப் பெருமை சேர்க்கிறார்கள்.

இதேபோல டாடா இன்ஸ்டிடியூட் ஆஃப் பண்டமெண்டல் ரிசர்ச் நிலையத்திலும் நிறையத் தமிழ் விஞ்ஞானிகள் இருக்கின்றனர்.

இவர்கள் விஞ்ஞானத் துறையில் இருந்தாலும் தமிழார்வம் மிக்கவர்களாக இருக்கின்றனர். பேராசிரியர் விஜயராகவனின் தமிழ்ப் பற்றுக்காக அவரைப் 'புலவர்' என்று கூட மற்றவர்கள் அழைப்பதுண்டு.

பம்பாய் வாழ் தமிழ் விஞ்ஞானிகளெல்லாம் 'அறிவியல் அமுதம்' என்ற பத்திரிகையில் தமிழிலே அறிவியல் விளக்கங்களைக் கட்டுரைகளாக எழுதினர்.

'அணுவைப் பற்றி' என்ற விஞ்ஞானப் புத்தகம் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தினரால் வெளியிடப்பட்டது.

அறிவியல் கட்டுரைகளை ஆங்கிலப் பத்திரிகைகளில் எழுதிக் கொண்டு வருபவர் டாக்டர் வி. எஸ். வெங்கடவரதன். பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில் ஓராண்டு பயிற்சிக்காக பம்பாய் வந்தவருக்கு அடுத்த வண்டியிலேயே தமிழகம் திரும்ப வேண்டும் போலிருந்ததாம்! ஆனால் சீக்கிரமே விஞ்ஞான ஆய்வில் தம்மை இழந்தார். டாட்டா இன்ஸ்டிடியூட்டில் பணியாற்றிய போது நேரு பிளானடேரியம் டைரக்டர் பதவி தேடி வந்தது. காலப் போக்கில் பம்பாய் பிடித்துப் போனது மட்டுமல்ல; பம்பாய் மக்களுக்காகப் பொதுப் பணி ஆற்றுகிற அளவுக்கு இவர் பம்பாய் வாசியாகியும் விட்டார். குடிசை ஒழிப்புக்காக மாநகராட்சி திட்டம் தீட்டிய போது, 'ஏழைகளை மனிதாபிமான முறையில் அணுக வேண்டும்; அவர்கள் வசிக்க மாற்று ஏற்பாடுகள் செய்து தர வேண்டும்' என்று அறிக்கை விட்டதோடு உண்ணாவிரதமும் இருந்தவர்.

நிலாக் கற்கள் பூமிக்குக் கொண்டு வரப்பட்டபோது அவற்றை ஆராய்ச்சி செய்த பெருமைக்குரிய தமிழரான டாக்டர் வி. எஸ். வெங்கடவரதன் நேரம் கிடைக்கும் போது கவிதைகளும் எழுதுகிறார்!


● டாக்டர் வி. எஸ். வி.

# இது ஓர் ஆரஞ்சு

பம்பாய் என்றதும் நிறையப் பேருக்கு அதன் 'சிவப்பு விளக்கு'ப் பகுதிகள் ஞாபகத்திற்கு வரும். ஆனால் சிவப்பு விளக்குப் பகுதிகளை விட மோசமான 'ஆரஞ்சு விளக்குப்' பகுதிகள் பம்பாயின் பல வட்டாரங்களில் இருக்கின்றன.

இங்கே பெண்கள் இல்லை. பெண்மையை வரவழைத்துக் கொண்டு பெண்களையும் தோற்கடிக்கும் வகையில் நடையுடை பாவனை செய்து நடித்துக் கொண்டு ஒரு கும்பல் இருக்கிறது.

இவர்களுக்குச் சமூகத்தில் ஓர் இடம் இருக்கிறது. அதனால் பரவலாகப் பம்பாயின் பல தெருக்களிலும் சுற்றி வருகின்றனர். இந்தியாவிலேயே இந்த வகை மக்கள் பம்பாயில் தான் அதிகமாக இருப்பது போன்ற பிரமிப்பு. இவர்களைச் சந்திப்பதற்காக இவர்களில் மூத்தவராகக் கருதப்படும் மைனும் மாவைச் சந்திக்க கோலிவாடாவில் உள்ள அங்காலி - கருமாரியம்மன் ஆலயத்துக்குப் (படம்) போனேன். நான் சென்ற சமயம் அவர்கள் ஊரில் இல்லை. கோயிலை இவ்வகை மக்களே பராமரிக்கின்றனர். அவர்களிடம் விவரம் கேட்டால் கிடைக்கவில்லை. அதனால் அவர்கள் சேர்ந்து வசிக்கும் பகுதி ஒன்றுக்குச் சென்றேன்.

பிளாட்பாரத்திலேயே குடிசைகள். வாசலில் இவர்கள் அமர்ந்து கொண்டிருந்தனர். நாலைந்து பேர் அமர்ந்திருந்த ஒரு குடிசைக்குள் சென்று பேசினேன்.

''ஆமா... எங்களைப் பற்றி எழுதணுமா? அதான் சினிமாவுல காட்டறாங்களே! நீ வேற எதுக்கு?''

''அடியே... அதோ போலீஸ் வருது... நீ போயிடு...''

அட இருக்கட்டுமே... இவரு ஆபீஸர் மாதிரி இருக்கிறார். கேட்டாச் சொல்லுரு...''

போலீஸார் வந்தனர். என்னைப் பார்த்து இந்தியில் 'ஏன், எதற்கு? என்று கேட்டனர். ''சீக்கிரம் போயிடு'' என்று கூறிவிட்டு ஒவ்வொரு இடமாகச் சென்று வசூல் செய்து கொண்டு போயினர்.

நான் சந்தித்த இத்தகைய மக்களில் பலர் தமிழ் பேசுபவர்களாக — தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களாக இருக்கக் கண்டேன்.

''தமிழ்நாட்டை விட்டு பம்

SPECIAL REPORT



புகைப்படங்கள்: டி. என். என். பிரசாத்

# விளக்குப் பகுதி!

பாய்க்கு வந்து என்ன செய்றீங்க...?''

''தமிழ்நாட்டில் என்ன செய்யறது? அங்கதான் ரோட்ல நடமாடினுலே, 'அதோடா பொட்டை...' 'அதோ போவுது பாரு...'ன்னு கலாட்டா பண்ணி வம்பு பண்ணுங்களே...''

''அதுக்காகவா வந்துட்டீங்க...?''

''ஆமா, இங்கே எங்களைப் பார்த்தாலே 'ராம் ராம்'னு கும்பிடுறுங்க... எங்களுக்குக் கவுரவம் இருக்கு... வருமானம் இருக்கு... வந்துட்டோம்... ஆமா நீ இன்னுன்னு எழுதப் போறே எங்களை? 'பொட்டை'ன்னு...?''

> தமிழ்நாட்ல என்ன செய்யறது? அங்கதான் ரோட்ல நடமாடினுலே, 'அதோடா பொட்டை...' 'அதோ போவுது பாரு...'ன்னு கலாட்டா பண்ணி வம்பு பண்ணுங்களே...

''அலிகள்னு எழுதட்டுமா?''

''ரைட். அப்படியே எழுது- ஆனுபோட்டோ எல்லாம் எடுக்காதப்பா...''

அதற்குள் அவர்களுக்குக் குருவாக இருந்த தலைமை அலி அதட்டல் போடவே கலைந்து போய் விட்டார்கள். அலிகள் முகாம்களில் குருதான் இவர்களுக்குத் தாய் தந்தை போல.

இவர்களை பம்பாயில் 'சக்கா' என்றும் 'சென்டா' என்றும் 'நம்புசக்' என்றும் அழைக்கின்றனர். இவர்கள் பெரும்பாலும் கோஷ்டி கோஷ்டியாகவே செயல்படுகின்றனர். இவர்களில் சிலர் பி. ஏ., பி. காம். என்று படித்திருப்பதும் சரளமான இங்கிலீஷில் பேசுவதும் ஆச்சரியமாக இருந்தது.

இவர்களில் பெரும்பாலோர் கடை கடையாகப் போய் பிச்சை — சாதாரணமாகப் போய் நின்றுலே ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் — எடுத்து வந்து வாழ்க்கை நடத்துகின்றனர். டான்ஸ் ஆடுவதும் பாட்டுப் பாடுவதும் பணத்துக்கு வகை செய்கின்றன.

பிச்சையெடுத்து வாழ்ந்தாலும் இவர்கள் திருட்டுத் தொழிலிலோ மோசடிகளிலோ இறங்குவதில்லை, பொய் பேசுவதும் குறைவு.

வீட்டில் நடக்கிற கல்யாணம், குழந்தை பிறப்பின் போது அலிகள் வந்துவிட்டுப்போனுல் நல்லது நடக்கும் என்ற மக்கள் நம்பிக்கையை இவர்கள் பயன்படுத்திக் கொள்கிறுர்கள்.

கல்யாண வீடு என்றுல், நாலைந்து அலிகள் சேர்ந்து போய்ப் பாட்டுப் பாடி, டான்ஸ் ஆடி பணம் வாங்கி வருவார்கள்.

அதேபோல குழந்தை பிறப்பு. ஆண் குழந்தைபிறந்ததுஎன்றுல்ரூ. 101 காணிக்கை வாங்காமல் வர மாட்டார்கள். பெண் குழந்தைகள் என்றுல் கொடுத்ததை வாங்கிக் கொண்டு வந்து விடுவார்கள்.

இந்த வருமானத்துக்காகத் தெருவில் கர்ப்பிணிப் பெண்கள் நடமாடும் போதே, அவர்களைப் பின்பற்றிப் போய், அவரது வீட்டில் ஒரு குறி போட்டுவிட்டு வந்து விடுவார்களாம். அந்தக் குறி போட்ட வீட்டுக்கு இன்னெரு அலி போகக் கூடாது!

பலதரப்பட்ட அலிகளைச் சந்தித்த போது அவர்களில் பலரும் நல்ல குடும்பங்களில் பிறந்து சமூகத்தால் புறக்கணிக்கப்பட்டு இப்படி வந்து சேர்ந்தவர்களாகவே இருந்தனர்.

நாங்க பொறந்த வூட்ல எங்களை வெரட்டுறுங்கல்ல... 'சனியன் எங்கேயாவது செத்துத் தொலையாதா! நம்ம மானத்தை வாங்குதே'ன்னு விலக்கறுங்கல்ல... அப்போ எங்கேயாவது ஓடிடணும்னு தோணுதுல்ல...



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1986 — பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள்:

1. சேவை — தமிழ் மகன்
2. நாணயத்தின் இன்னொரு பக்கம் — மலர் வண்ணன்
3. நன்றி கெட்ட நிலைகள் — பெ. கருணாகரன் (மணிக் கொடியான்)
4. பாடம் — எஸ். பிரபாகர் (சந்திர பிரபா)
5. ஒட்டுண்ணி — லலித் கிருஷ்ணமூர்த்தி (சந்தோஷ்) (அறிமுக எழுத்தாளர்)
6. ஒரு புதிய ஜனனம் — D. பாபு (அறிமுக எழுத்தாளர்)
7. உழவு மாடு — ஏ. முகம்மது அலி (பெமினா)
8. அதுவே தேவலாம் — செல்வராஜ் (உத்தம சோழன்) (அறிமுக எழுத்தாளர்)
9. உயர்வு எங்கே? — கே. விசுவநாதன் (ஜே)
10. கண்ணுக்குத் தெரியாத கரைகள் — ஆர். பி. செல்வம் (ஞானம்பாள் செல்வம்)
11. வித்தியாசமானவன் — க. ஒப்பிலி அப்பன்
12. உனக்காக ஒரு பொய் — மா. தமிழ்மணி
13. ஒரு நண்பனின் கதை — மேட்டூர் நல்லப்பன்
14. காத்திருக்கிறார்கள் — ஹெச். என். ஹரிஹரன்

அப்படித்தான் எங்க ஜமாவோட வந்து சேர்ந்துடறோம்...'' என்று ஒருவர் தாம் வந்து சேர்ந்த கதையைக் கூறினார்.

அப்படி வந்து சேருகிறவருக்கு முதலில் காதில் துளை போடப்படுகிறது. அதன் பின்னர், புடைவை, ரவிக்கை, பாவாடை, பிளவுஸ் எல்லாம் கொடுக்கப்பட்டு உறுதி மொழியும் வாங்கப்படுகிறது.

இவர் சரிப்பட்டு வருவார் என்று தெரிந்த பிறகுதான் இவர்களுடைய குலதெய்வத்தின் முன்னால் நிறுத்திக் கோலாகலமாக தேவி பூஜை நடக்கிறது. அந்தச் சமயத்தில் தேங்காய் உடைத்து, அது சரியாக இருந்தால் அதுவே சுபமுகூர்த்தமாகக் கொள்ளப்படுகிறது. தேவியின் திரிசூலம் சரியாக நிற்க வேண்டும். (இல்லையென்றால் அந்த அலியைத் தள்ளி வைத்து விடுவார்கள்.) இந்த நிகழ்ச்சியை ஏறத்தாழ கல்யாணம் போலவே நடத்துகின்றனர்.

இதற்குப் பிறகு பயிற்சி. கொஞ்ச நஞ்சமிருக்கிற ஆண்மையையும் விட்டுவிட வேண்டும். மீசை தாடியெல்லாம் வளராமல் செய்ய வேண்டும். சில நாட்களில் 'தாயம்மா'வின் கண்காணிப்பில் நடையுடை பாவனைகளில் பெண்மையை வரவழைத்து விடுகின்றனர்.

இதன் பிறகுதான்......

உடலால் ஆணாக இருப்பவரைப் பெண்ணாகவே மாற்றுகின்றனர்...

ஒரு நல்ல சுபமுகூர்த்தத்தில் அவரை ஒரு மணப்பெண் போலக் குளிக்க வைத்து பூ, சந்தனம், சாந்து என சிங்காரித்து, சிவப்புப் புடைவை கட்டி, வாத்தியங்கள் முழங்க, மற்ற சீனியர் அலிகள் பாட்டுப் பாட வைபவம் ஆரம்பமாகிறது.

அலியாக்கப்படுகிற நபரை, நாலு பேர், கை, கால்களைப் பலமாகப் பிடித்துக் கொள்கின்றனர். 'தாயம்மா'வாவது அல்லது சீனியர் அலியாவது சவரக் கத்தியால் கண்ணிமைக்கும் நேரத்தில் அவரது ஆண் குறியை முழுக்க அறுத்து விடுகின்றனர்.

கொடூரமான இந்த வைபவத்தைக் காட்டுப் பிரதேசங்களில், மறைவான இடங்களில் செய்கின்றனர். ரத்தம் பயங்கரமாகப் பீறிட உடனே, எண்ணெய், மூலிகை, தைலம் என்று நாட்டு வைத்தியம் பார்க்கப்படுகிறது. இருந்தாலும் இறந்து போகிறவர்களும் பலர் உண்டு.

சில இடங்களில் இந்த வேதனையைத் தாங்கிக் கொள்ள கஞ்சா, அபினி, சாராயம் போன்ற மயக்க மருந்துகளை உட்கொள்ள வைக்கின்றனர்.

இந்த நிகழ்ச்சியைச் சுபநிகழ்ச்சியாகக் கொண்டாடி அனைவருக்கும் பிரசாதமாகக் கோதுமை அல்வா வழங்குகின்றனர்.

அறுவை முடிந்த அலியை ஒரு குழந்தையைப் போல மருந்து, போஷாக்கு உணவு கொடுத்து ரணம் ஆறுகின்ற வரையில் பார்த்துக் கொள்கின்றனர். ஏறத்தாழ நாற்பது நாட்களில் அவர் 'ஓகே'வாகி விடுகிறார். அதன் பின்னர் குழந்தைக்குத் தாலாட்டு விழா நடப்பது போல விழா நடத்தி, பூரண அலியாக 'உபதேசித்து' அனுப்புகின்றனர்.

இப்போதெல்லாம் சிலர் தனியார் டாக்டர்களிடம் ரகசியமாக அறுவை செய்து கொள்வதும் உண்டாம். சிலர், டாக்டர் ஏற்பாடுகளில் பெண் குறி மாதிரியும் சிகிச்சை செய்து கொண்டிருக்கின்றனர்.

சில இடங்களில் அலிகளாக அங்கீகரிக்க 'பூப்பு விழா' என ஒன்றை நடத்துவார்களாம். அது இன்னொரு கொடூரம்!

இருபத்தோராம் நூற்றாண்டுக்குச் செல்லும் இந்த உலகத்தில்தான் இந்தக் கொடு

மைகளெல்லாம் நடந்து வருகின்றன.

அலிகள் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ளும்போது கைதட்டி வணக்கம் தெரிவித்துக் கொள்கின்றனர். பேச்சுக்குப் பேச்சு கைத்தட்டு இருக்கும். அந்தக் கைத்தட்டிலேயே கோபம் இருக்கும்; ஏளனம் மிளிரும், வியப்பும் தெரியும். அலிகளுக்கே உள்ள தனித்தன்மையான இந்த 'சங்கேதமொழியைத் தாளி' என்கின்றனர். இதைப் பற்றி விஜயா என்ற அலியிடம் கேட்ட போது, "ஆமா! நாங்கதான் கைதட்டலாம்! குடும்பப் பொண்ணு எவளாவது கைதட்டினு ஊர் என்னு நெனைக்கும்?" என்று ஒரு கைதட்டு அடித்தார். அது கும்மியடிப்பது போல இருந்தது.

இவர்களது உரையாடல்களில் கீழ்த்தரமான பேச்சுக்கள் மிகவும் சரளமாக இருக்கின்றன. ஆனாலும், இந்தவாழ்க்கைத்தொடரிலிருந்து அறுத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமே இவர்களிடம் அதிகமாக இருக்கிறது.

இறந்து போன ஓர் அலியின் சடலத்தைப் பொதுமக்கள் யாருமே இதுவரை பார்த்திருக்க முடியாது. அவர்கள் சடலத்தை வெளியே யாருக்கும் காட்டாமல் இரவோடு இரவாகச் சுடுகாட்டுக்கு எடுத்துச் சென்று ஈமக்கிரியைகள் புரிந்துவிட்டு வந்துவிடுகின்றனர்.

இறப்பு — துக்கமான விஷயம். ஆனால் இவர்கள் அடக்கத்திற்கு முன்பு சடலத்தைக் கிடத்தி ஏதோ மங்கலகரமான விழா போலச் சடங்குகள் செய்து, 'இன்றோடு நீ நல்ல கதி அடைய வேண்டும். மீண்டும் பிறவியெடுக்கக் கூடாது' என்று வேண்டுதல் செய்து கொண்டாடி மகிழ்கின்றனர். அதன் பிறகு சடலத்தை அடக்கம் செய்துவிட்டு ஒன்றும் நடவாதது போல ஊருக்குள் திரும்பி வந்து விடுகின்றனர்.

பம்பாயில் உள்ள அலிகள் பலர் வசதியுள்ளவர்களாகவே இருக்கின்றனர். சிலர் பெரிய பணக்காரர்களுக்குத் தாலி கட்டப்பட்டு மனைவியாகக் கூட வாழ்கின்றனர். சிலர் தனியார் வீடுகளில் வேலை செய்கின்றனர்.

அலிகளில் பலர் நிஜமான பெண்களை விட அழகாக, நளினமாகக் கூட ஜீன்ஸ், சல்வார் கம்மீஸ், மிடி போன்ற ஆடைகளில் காணப்பட்டனர். இவர்கள் சிவப்பு விளக்குப் பகுதிகளிலும் காணப்படுகின்றனர். பலவித பாலுறவு நோய்கள் பரவக் காரணமாகின்றனர். இரவு நேரங்களில் வி. டி., ப்ளோரா பவுண்டன் போன்ற பிரதான வீதிகளிலும் இவர்களது நடமாட்டம் இருக்கிறது.

மாதம் சுமார் ரூ. 1000 த்திலிருந்து ரூ. 10,000 வரை சம்பாதிப்பவர்களும் உண்டு. இவர்களில் பலர் சொந்த ஃபிளாட், கார் போன்ற வசதிகளுடன் இருக்கின்றனர். உள்ளூர் தாதாக்களுக்கும் இவர்களுக்கும் நெருக்கம் இருப்பதாலும், போலீஸ் இவர்களை அதிகமாகத் துன்புறுத்தாததாலும் இவர்கள் விபசாரம், விபசார விடுதிகள் நடத்துதல் போன்ற தொழிலில் ஈடுபடுகின்றனர்.

ஆண்டுக்கொரு முறை இவர்களது குலதெய்வம் இருக்கிற ஊரில் கூடுகின்றனர். அந்தக் குலதெய்வம், தமிழ்நாட்டிலுள்ள விழுப்புரத்துக்கருகே கோவாகத்தில் இருக்கிறது. சித்திரைப் பருவத்தின் போது இங்குள்ள கூத்தாண்டவர் கோயிலில் நடைபெறும் விழாவுக்கு வருகின்றனர். பம்பாயிலிருந்து தனி ரயில் பெட்டிகள் இவர்களுக்கென்று இணைக்கப்படுகின்றன.

இந்த விழாவின் போது இவர்கள் அனைவரும் ஆண்டவனின் மனைவியராகத் தாங்களே கல்யாணம் செய்து கொள்கின்றனர். இப்படி கூடும் போது புதிதாக வருபவர்களை பம்பாய்க்கு அழைத்துச் செல்வதும் உண்டு.

கைகால் முடமாகி ஊனமுற்றவர்களுக்காக உலகளாவிய அளவில் விழிப்புணர்ச்சி ஏற்படுத்த ஐ. நா. சபையே முயற்சி எடுக்கிறது. பிறவியிலேயே மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்குக் காப்பகங்கள் உருவாகின்றன. ஆனால் பிறவியிலேயே ஊனமுற்ற மற்றொரு பிரிவினரான இந்த அலிகள் விஷயத்தில் யாரும் அக்கறை காட்டாதது வேதனை அளிப்பதாகும்.

அலிகளைச் சாலையில் பார்த்துச் சிரிப்பவர் கூடச் சற்று அவர்களுடன் பழகினால் அவர்களுடைய பரிதாபகரமான நிலை கண்டு இரங்கி, கண்கலங்குவது உறுதி.



பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ்களுக்குப் பொறுப்பேற்று, நேரில் சென்று பேட்டிகள், கட்டுரைகள் எழுதியதுடன் மற்றவர்களை எழுதவும் தூண்டியவர்:

**விசிட்டர் அனந்த்**

அவருடன் சென்று இந்தச் சிறப்பிதழ்களில் வெளியான பெரும்பாலான புகைப் படங்களை எடுத்தளித்தவர்:

**சுபா ரவிசங்கர்**



பாதல்

ஐயோ பாவம்! பயங்கரவாதிங்க எவ்வளவு கஷ்டப்படறாங்க!... இந்தத் திருடன் பார்வையாவுக்கு எங்கெ கண் தெரியுது?...

பயங்கர வாதிகள்











# கல்கி

1986 ஆகஸ்டு 10
மலர் 45 இதழ் 2
அக்ஷய ஆடி 25



## பாகிஸ்தான் அனுப்பி வைக்கும் பயங்கரவாதிகள்

முக்த்ஸாரில் பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்த அப்பாவிகளைக் கண்மூடித்தனமாகச் சுட்டுக் கொன்ற பயங்கரவாதிகள் ரத்த வெறி கொண்ட காட்டேரிகளை விடக் கொடுமையானவர்கள். "அவர்கள் யார் யார் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டாகிவிட்டது; வளைத்துப் பிடிக்கும்வரை ஓய மாட்டேன்" என்று சூளுரைத்திருக்கிறார் போலீஸ் டைரக்டர் ஜெனரல் ரெபைரோ.

ரெபைரோ பதவி ஏற்ற பிறகு பயங்கரவாதிகளின் கொட்டத்தை அடக்குவதிலும் அவர்களை வளைத்துப் பிடிப்பதிலும் கணிசமான வெற்றி பெற்றுள்ளார் என்பதை எல்லோருமே ஒப்புக் கொள்கிறார்கள். அவரது திறமைக்கும் ஆற்றலுக்கும் கூடச் சவாலாக அமைந்துள்ளது முக்த்ஸார் படுகொலை. இதிலிருந்தே ரெபைரோ ஏற்றுள்ள பணி எவ்வளவு கடினமானது என்பது விளங்கும். ரெபைரோவுக்கு இருக்கும் இரண்டு மிகப் பெரிய தர்மசங்கடங்களுள் ஒன்று: போலீஸ் இலாகாவிலேயே பயங்கரவாதிகள் ஊடுருவி இருப்பது. மற்றொன்று: பயங்கரவாதிகள் விஷயத்தில் முதல்வர் பர்னாலா போதிய அளவு கடுமையுடன் நடந்து கொள்ளாதது.

பர்னாலா கண்டிப்புடன் நடந்து கொள்ளத் தயங்குவதற்குக் காரணம் அரசியல். பயங்கரவாதிகளானாலும் சீக்கியர்; தீவிரவாதிகளானாலும் சகோதரர் என்ற உணர்வு பொதுவாக மக்களுக்கு இருக்குமே என்ற எண்ணம் அவரை மென்மைப்படுத்துகிறது. போதாக்குறைக்கு பாதல், டோரா கோஷ்டி அமைச்சரவையிலிருந்து சுயநல நோக்குடன் விலகிப் பயங்கரவாதிகளுடன் கொஞ்சிக் குலவிக் கொண்டிருக்கிறது.

இவர்கள், இறந்து போன பயங்கரவாதிகளுக்கு இரக்கம் தெரிவித்து அவர்கள் இல்லங்களுக்குச் சென்று வருகின்றனர்; பிரிவினை கோரும் தேசத் துரோகிகளுக்காக இப்படி வெளிப்படையாக அனுதாபம் காட்டிக் கண்ணீர் விட்டுக் கரைந்துருகுவது அந்தத் தேசத் துரோகத்தைவிடவும் மோசமான செயல். இவர்கள் தெரிந்தோ தெரியாமலோ ஜியாவின் அடிவருடிகளாகிப் போகிறார்கள். எப்படியெனில் பாகிஸ்தான்தான் பயங்கரவாதிகளை உருவாக்கி இந்திய எல்லைக்குள் அனுப்பி வைக்கிறது என்பது இன்று உள்ளங்கை நெல்லிக்கனி.

பாகிஸ்தானில் பயிற்சி பெற்ற முந்நூறு சீக்கிய பயங்கரவாதிகள் சமீபத்தில் நமது பாதுகாப்புப் படையினரிடம் தாங்களாகவே முன்வந்து சரணடைந்தார்கள். துர்போதனைக்கு ஆளாகித் தாங்கள் தவறான பாதையில் சென்றதாக இவர்கள் கூறி வருத்தப்பட்டார்கள். பயிற்சி அளிப்பதாக ஆரம்பித்து மூளைச் சலவையில் முடிகிற நேரத்தில் எப்படியெல்லாம் பாகிஸ்தானியர் தங்களைச் சித்திரவதை செய்தனர் என்பதையும் விவரித்தார்கள். எப்படியோ தக்க தருணத்தில் தப்பிப் பிழைத்து வந்து சரணாகதி அடைந்திருக்கின்றனர். இவர்கள் கூறுவது முற்றிலும் உண்மை என்பதைக் கனடா நாட்டில் சீக்கியர்களே நடத்தும் ஒரு பத்திரிகை உறுதிப்படுத்துகிறது. பாகிஸ்தானில் ஒரு பெரிய சீக்கியப் படையே பயிற்சி பெற்று வருகிறது என்று அந்தப் பத்திரிகை (பரதேசி பஞ்சாப்) கூறுகிறது.

பஞ்சாபை இன்று பஞ்சாபியர்தான் அதிலும் அகாலிகள்தான் ஆள்கிறார்கள். தேர்தல் நடக்கிறது. சுயாட்சி இருக்கிறது. சர்க்காரியா கமிஷன் மாநிலங்களுக்கு மேலும் அதிகாரங்களை வழங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆகவே காலிஸ்தான் என்ற தனிநாடு கோரிக்கை சில சுயநலவாதிகள், பாரதத்தின் எதிரிகளுடன் சேர்ந்து நடத்தும் சூழ்ச்சியே தவிர மக்கள் அதை விரும்பவில்லை. இதை அவர்கள் தேர்தல் நேரத்தில் சந்தேகத்துக்கிடமின்றி வெளிப்படுத்தியும் உள்ளனர்.

இந்தச் சூழலில் இரண்டு காரியங்களைப் பிரதமர் செய்தாக வேண்டும். முதலாவதாக லோங்கோவால் ஒப்பந்தத்தைத் துரிதமாக நிறைவேற்றி வைக்க அரும்பாடுபட்டாக வேண்டும். இரண்டாவதாக எதிர்க் கட்சிகளுடன் பஞ்சாப் பிரச்னையைப் பொருத்தமட்டில் கரம் கோத்துக் கொண்டு கலந்தாலோசிக்க வேண்டும். அவர்களைத் தம்முடன் அணைத்துச் செல்ல வேண்டும். லோங்கோவாலையே நேசக்கரம் நீட்டி வளைத்துப் போட்டுவிட்ட ராஜீவுக்கு இந்த ஓர் அம்சத்தில் மட்டும் எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பைக் கோரிப் பெறுவது சிரம சாத்தியமாக இருக்காது. பஞ்சாப் பயங்கரவாதிகள் பிரச்னையில் நாடு ஒருமித்த சிந்தனையோடு ஒரு குரலாக ஒலிக்க வேண்டும். இவ்விஷயத்தில் எதிர்க்கட்சிகள் ஆட்சியை விமர்சிக்க இடம் தருவது மத்திய அரசுக்குப் பலவீனம் என்பதோடு பயங்கரவாதிகளுக்கு அதுவே பலமாகவும் விளங்குகிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டி பாப்பா—பாரதியார்

# சம்சாரம் அது மின்சாரம்



விசுவோடு விசு போட்டியிடும் படம்.

முதல் சாமர்த்தியம் பொருத்தமான ஆட்களைப் பிடித்து அந்தந்தப் பாத்திரத்தில் போட்டிருப்பது. கர்ப்பிணி மனைவியைக் குலுக்கல் ஆட்டோவில் ஏற்றி டாக்ஸி செலவை மிச்சப்படுத்தும் மூத்த மகனாய் ரகுவரன். மீசையில்லாத அந்த முகத்தில்தான் எத்தனை கடுகடுப்பு, எத்தனை நெரிசல்! மூத்த மருமகளாய் லக்ஷ்மி. கேட்கவே வேண்டாம், அட்டகாசமான துள்ளல், அமைதி, குறும்பு, துக்கம் இத்யாதிகள்.

இரண்டாவது மகன் சந்திரசேகர். தலை நிமிராமல் அப்பாவுக்குப் பணிந்து போதலும், புது மனைவியின் ஏக்கங்களைப் பற்றி, அவ்வளவாகக் கவலைப்படாத அலட்சியங்களும், பிரகாசம். அவர் மனைவி மாதுரி, ஜஸ்ட் ஓகே.

மூன்றாவதாய், எதிர்த்துப் பேசுவதும், மறுத்து நடப்பதுமே கௌரவம், சுதந்திரம் என்று நினைக்கும் மகள். இளமைத் திமிருக்கு ஏற்ற இளவரசி. இவரைப் புடைவைக்காகவும், தலை நிறைய வைத்த பூவுக்காகவும் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டு, திருமணத்திற்குப் பின் மனைவியின் நாகரீகங்களை ஏற்க முடியாமல் தவிக்கும் திலீப். அடாத மீசையோடு அவர் அப்பா கிறிஸ்துவ கிஷ்மு.

ப்ளஸ் டூவை எழுதிய, எழுதிய, எழுதும், எழுதப் போகும் கடைசி மகன் ஹாஜா ஷெரீஃப்.

ஜஸ்ட் வேலைக்காரி என்று ஒதுங்கிவிடாமல் குடும்பத்தின் அத்தனை புயல், வெள்ளங்களிலும் முட்டுக் கொடுத்து உபகாரம் செய்யும் மனோரமா. சம்பந்தியோடு சண்டைக்குப் போகும் அந்தக் காட்சி மகா கலகல. குறுக்கே பேசுபவர்களை திரும்பிப் பார்க்காமலேயே 'நீ கம்முனு கெட' என்று அமர்த்திவிட்டு, தன் பங்குக்கு இன்னும் நான்கைந்து வார்த்தைகளைச் சேர்த்து ஏசி ஏக தூள் கிளப்புகிறார்!

இத்தனைக்கும் மேலே விசு—கமலா காமேஷ் ஜோடி.

'ஐயையோ இத்தனை காரெக்டர்ஸா' என்று பயப்படுவதைவிட, 'அடேங்கப்பா! அத்தனை பேரையும் நினைவில் நிற்கிற மாதிரி படைத்திருக்கிறாரே' என்று விசுவைப் பாராட்டத் தோன்றுகிறது.

பெண் பார்க்கும் ஸீனில் பரம்பரை பரம்பரையாக என்று முத்திரையிட்டு, 'ஜானகி தேவி ராமனைத் தேடி' பாடலைப் போட்டு, ஃப்ளாஷ் பாக் பெண் பார்க்கும் காட்சிகளைக் கோர்த்து .... அமர்க்களம். பகுதி நேர வாட்ச்மேன் உத்யோகத்தில் கத்தியுடன் ஒரு திருடன் குறுக்கிட, "அண்ணே, நீங்க இங்க திருடினா என் வேலை போயிடும்" என்று கைகூப்பி ஆரம்பித்து, கடைசியில் அவன் தோளிலேயே கைபோட்டு சமாதானம் செய்வது போன்ற விசு பிராண்ட் வெடிகள் ஆங்காங்கே.

வீட்டுக்குக் குறுக்கே கோடு கிழிப்பது, பிள்ளை பெற்று வந்த மருமகளை யாருமே வாய் நிறைய வரவேற்காதது, இருக்கும் நேரத்தையெல்லாம் விட்டுவிட்டுப் புதிதாய்க் கல்யாணமான அண்ணனுக்குத் தொந்திரவாய் ராத்திரி நேரம் தம்பி பாடம் படிப்பது, நான்கு 'பாத்திரங்களுக்கு மேல் ஃப்ரேமில் வந்தால் கூடிய மட்டும் எல்லோரும் காமிராவைப் பார்க்க நிற்பது என்று அங்கங்கே டிராமா—சினிமாத்தனங்கள் எட்டிப் பார்க்கின்றன என்றாலும் அடுக்கடுக்கான சம்பவங்களின் கோர்வை, கடைசி வரை நிமிர்ந்தே உட்கார வைக்கிறது.

டைட்டில் பாடல் மெச்சும்படியிருக்கிறது.

ஒரு விஷயம் தீர்மானமாய்த் தெரிகிறது: விசுவுக்குக் கைவந்த மசாலா — குடும்பக் கதைதான்.

— ஜெயமன்மதன்



# உயிராசை ②

போன வாரம்: பெங்களூரில் சில நாட்களுக்கு முன்பு ஒரு பல மாடிக் கட்டடம் திடீரென்று சரிந்து விழுந்து புத்தகக் கடை அப்படியே தரை மட்டமாயிற்றே... அதில் பேஸ்மெண்ட்டில் டாக்டர் ஸ்ரீனிவாசமூர்த்தி மாட்டிக் கொண்டு அதிசயமாகத் தப்பிப் பிழைத்தார். அவரை நான் பேட்டி கண்டேன்!

## சுஜாதா

உடனே பசி, தாகம், மூத்திரம், அழுகை எல்லாம் ஒரே சமயத்தில் வந்துவிட்டன. அதைவிடக் கவலை என்னும் பயங்கர புட்பால்! வயிற்றில் ஒரு பந்து! நான் வீட்டில் 'புத்தகக் கடைக்குப் போகிறேன்' என்று யாரிடமும் சொல்லிக் கொள்ளவில்லை! 'ஏதோ பொடிநடையாக வீட்டை விட்டுப் போயிருக்கிறார்' என்றுதான் எண்ணிக் கொண்டிருப்பார்கள். என்னைத் தேட ஆரம்பிக்க ராத்திரி பதினொரு மணியாகும். முதலில் ஜெயநகரில்தான் தேடுவார்கள். விரயமாக நண்பர்கள் வீட்டில் விசாரிப்பார்கள். சில சமயம் நான் திடீர் என்று புறப்பட்டு மைசூர் போய்விடுவேன். அதனால் மைசூருக்குப் போன் பண்ணி விசாரிப்பார்கள்... 'ஏய் சேஷு டயம் வேஸ்ட் பண்ணுதேடா! நான் இங்கே புத்தகக் கடையில் மாட்டிக் கொண்டிருக்கிறேண்டா! சுஷ்மா நீயாவது சொல், தாத்தா புத்தகக் கடைக்குத்

டாக்டர் ஸ்ரீநிவாசமூர்த்தி என்னை முழுசாகப் பார்த்து, "ஆம்! சின்னக் குழந்தை போல இந்த வயசில் அழுதேன். என்னப்பா வயசு எனக்கு?" என்று இழுத்தார்.

"சொன்னீர்களே எழுபத்தெட்டு!"

"இந்த வயசுக்குச் சாப்பாடு எல்லாம் குறைச்சல். கண்ட வேளைகளில் தின்னுவதில்லை. ஆனால் கட்டடம் விழுந்து உள்ளே மாட்டிக் கொண்டேன் என்று தெரிந்த

தான் போயிருக்கிறார்...'

''ம்ஹூம் என்னை அந்த விபத்துடன் ஒட்டவைக்கஒரு நாளாவது ஆகும். அய்யோ யாராவது வாருங்களேன்; காப்பாற்றுங்களேன்!

''யாருக்கும்கேட்டிருக்கும்என்றுதோன்றவில்லை!''

அப்போது மற்றொரு பயம் தோன்றியது. ராத்திரிச் சாப்பாடு கிடையாது! தண்ணீர் கிடையாது. அய்யோ!

''உபவாசம் இருந்திருக்கிறேன்; வயிறு சரியில்லையெனில் சாப்பாட்டைத் தவிர்த்திருக்கிறேன். நடு ராத்திரியில் பசித்தாலும் ரெப்ரிஜிரேட்டரைப் படையெடுக்காமல் சும்மா இருந்திருக்கிறேன். ஆனால் அடுத்த வேளைச் சோறு கிடைக்காது என்றதும் என்னவோ மூளை வேறுவிதமாகச் சிந்திக்கத் துவங்கி, உடனே பசி என்னும் துரோக எண்ணங்களைத் துவக்கி விடுகிறது... அந்தக் கணமே பசிக்க ஆரம்பித்துவிட்டது. அது மட்டும் இல்லாமல் சாயங்காலம் லேசாக டிபன் சாப்பிடுவேன். என் மருமகள் சியாமளா சுடச் சுடப் போண்டா கொடுப்பாள். ஒரே ஒரு போண்டா,இல்லையெனில் கொஞ்சம் வெல்லம் வைத்து அடை பண்ணி கொடுப்பாள். அதெல்லாம் அந்த இருட்டில் தெளிவாக ஞாபகம் வந்தது. ராத்திரி இரண்டு — இரண்டே இரண்டு சப்பாத்தி, கன்னம் வீங்கி அதை அமுத்தினால் லேசாக ஆவி பறக்கும். பொன் போலத் தருவாள். உடன் ஒரு சப்ஜி, தக்காளி, ஒன்றிரண்டு வெங்காயம், பருப்பு அடாடா! அதன்பின் ஒரு கப் மோர் சாதம் ஒரே ஒரு வடு மாங்காய்...! எல்லா ஞாபகங்களும் என் மனத்தில் புரண்டன. அதன்பின் சுஷ்மாவுக்குக் கணக்குப் பாடம். 123 ஆம் பக்கத்தில் அடையாளம் வைத்திருக்கும், அஸ்ட்ரானமி புத்தகம்...

''நான் எந்த போஸில் இருந்தேன் என்பதை நீ தெரிந்து கொள்ள வேண்டும். படுத்திருக்கிறேனா, மல்லாந்திருக்கிறேனா என்று தெரியாத எக்கச்சக்கமான நிலை. இடுப்புக்குக் கீழ் எல்லாம் புழுதி, கான்கிரீட் சிதறல்; மணல்!, படுபாவி காண்ட்ராக்டர் கலந்த மணல் எல்லாம் என்னைப் பாதியாகப் புதைத்திருக்க, முழங்கை ஒரு கான்கிரீட் கம்பத்துக்குள் மாட்டிக் கொண்டிருக்க, இடது கையை மட்டும் விடுவித்துக் கொள்ள முடிந்தது. அதற்கே அரை மணி ஆயிற்று — இல்லை ஆறு மணியா! என் வயிற்றில் இருந்த பயத்தைப் பற்றிச் சொன்னேன்.

''மரண பயம்?''

''இல்லை, மரண பயம் என்பது அப்புறம் பத்தாவது நாள் வந்தது. இது வேறு பயம். பயத்தில் மொத்தம் முப்பது வகைகள் இருக்கின்றன என்பதை அந்த நாட்களில்தான் உணர்ந்தேன். முதன் முதலில் எனக்கு ஏற்பட்ட பயம் அறியாமையால் பயம்! எனக்கு என்ன ஆகப் போகிறது என்று எனக்குத் தெரியாததால் பயம்! என்னை விட்டுவிட்டப் போகிறார்கள்! நான் இங்கு புதைந்திருப்பது யாருக்குமே தெரியப் போவதில்லை. என்னதான் கூச்சல் போட்டாலும் யாருக்கும் கேட்கப் போவதில்லை! உயிரோடு சமாதி என்ற பயம் முதல் பயம்!

அந்த பயத்துக்கு மாற்றாக வெளியே இருப்பவர்கள் அதி புத்திசாலிகள் என்கிற நம்பிக்கையும் கரை கட்டியது. நிச்சயம் பில்டிங் சரிந்திருப்பதை இந்த முட்டாள்கள்,மன்னிக்கவும், இந்தப் புத்திசாலிகள் கவனித்திருப்பார்கள். இப்போது வெளியே ஆளும் அம்பும் படையுமாகச் சூழ்ந்திருப்பார்கள், ஆம்புலன்ஸ் வந்திருக்கும். போலீஸ், தீயணைப்புப் படை, பிரஸ், ரத்த தானம் கொடுப்பவர்கள், உடலுதவி, முதலுதவி என்ற எத்தனையோ பேர் வந்திருப்பார்கள். தண்ணீர் வண்டி, வெல்டிங் செட்டு எத்தனை வந்திருக்கும். ஏன்! பேல்பூரி, பட்டாணி வண்டி கூட வந்திருக்கும்! எத்தனை அமர்க்களமாகஇருக்கிறது.ஸ்ரீநிவாசமூர்த்தி இதோ பதினைந்து நிமிஷத்தில் கட்டடத்தைப் பெயர்த்துக் கொண்டு ஸ்ரீமன்நாராயணன் போல்,ஒரு காக்கி உடை அதிகாரி தோன்றி 'மெல்ல! மெல்ல!' என்று என்னை விசாரித்து காப்பாற்றப் போகிறார் ...!

''ஆனால் ஸ்ரீனிவாசமூர்த்தி! ஒரு சந்தடி இல்லையே, ஓசையில்லையே!

சந்தடியெல்லாம் இருக்கிறது. எனக்குக் கேட்கவில்லை. காதைத் தொட்டுப் பார்த்தால் மணல் அடைத்திருந்தது. தட்டித் தட்டிக் காதைக் கொஞ்சம் சுத்தப்படுத்திக் கொண்ட போது ஒரு முனகல் கேட்டது. யாரு யாரு என்று கூப்பிட்டுப் பார்த்தேன். முனகல்தான் கேட்டது. — ஒருவேளை என் முனகலே எனக்குக் கேட்கிறது போலும்; அதனால்தான் பதிலில்லை என்று எண்ணிக் கொண்டேன். வந்துவிடுவார்கள்! விழுந்து இப்போதுதானே பத்துப் பதினைந்து நிமிஷம் ஆகியிருக்கும்,இல்லை! மூன்று மணி நேரம் ஆகியிருக்கும். என் கடிகாரம் எங்கே? வீட்டில்இருக்கிறது. வீட்டில்கூடத்து அலமாரியில் டால்ஸ்டாயவ்ஸ்கியின் புத்தகத்தின் அருகில் இருக்கிறது. காரமஸோவை மறுபடி படிக்கலாம் என்று எடுத்து வைத்திருந்தேன். டால்ஸ்டாயவ்ஸ்கியின் சிறுகதை ஒன்று ஞாபகம் வந்தது! ஒருத்தன் தன் இளமைக்காலத்தில் லஞ்சம் வாங்கினதாக — டிஸ்மிஸ் செய்தகாரியாலயத்துக்கு எதிரே கேஸ் போடுகிறான். வழக்கு சின்ன கோர்ட், பெரிய கோர்ட், சுப்ரீம் கோர்ட், இவன் அப்பீல், எதிர் அப்பீல் என்று வாழ்நாள் முழுவதும் நீண்டு கொண்டே போகிறது. கடைசியில் கிழவன் தொண்ணூறு வயசில் மரணப்படுக்கையில் இருக்கும்போது ஒரு ஆள் அவன்

காதருகில் வந்து சொல்கிறான்: ''தாத்தா! கேஸ் ஜெயிச்சுடுத்து!''

அந்தக் கதை ஞாபகம் வந்தது! எனக்கும் வீட்டுக்குத் தந்தி வருகிறாற் போலவும்-ஸ்ரீனிவாசமூர்த்தி கங்கிராஜுலேஷன்ஸ்! உனக்கு நோபெல் பரிசு கிடைத்திருக்கிறது! எங்கய்யா கிழவன்? சுஷ்மா! தாத்தா எங்கே?

''வாக் போயிருக்கார் மாமா!''

''எப்ப வருவார்?''

''சொல்ல முடியாது. திடீர் என்று மைசூர் கிளம்பிப் போனாலும் போயிடுவார் — அவர் இப்பல்லாம்என்னசெய்வார். எப்படி நடந்து கொள்வார்என்றுசொல்லவேமுடியவில்லை!

''பாவி! பாவி! மைசூர் போகலே! இங்கே ஆனந்தராவ் சர்க்கிள்ள அடியில் மாட்டிக் கொண்டிருக்கிறேன்! அய்யோ! என்னைத் தேடவே மாட்டீங்களா?''

இப்போது கூர்ந்து கேட்ட போது சைரன் ஒலி கேட்டது. விழுந்த கட்டடம் பேசுவது போல் ஒரு ராட்சச முனகல் கேட்டது. ஆம்புலன்ஸ் வந்துவிட்டது. இடிக்கும் சப்தம் எதுவும் கேட்கவில்லை! மணி என்ன? காலை கூட அசைக்க முடிகிறதா? எப்படி பாத்ரூம் போகப் போகிறேன்? ராத்திரி என்ன சாப்பிடப் போகிறேன்? இப்போதே பசிக்கிறதே! இதே கபாலியிலிருந்து சற்றுத்தூரம் போய் இடதுபக்கம் திரும்பினால் சுடச்சுட இட்லி போடுவார்கள். இட்லி, காலணா சைஸுக்கு மசால் வடை, கொஞ்சம் புதினா போட்டிருக்கும். நாலணாவுக்கு ஆறு வடை! கையால்தொட முடியாதபடி அத்தனை சூடாக இருக்கும்...

நாக்கு! ஜிஹ்வா! நாக்கின் சபலங்கள்! நான் சாப்பிட்ட வட்டவட்ட இனிப்புக்கள் சதுர சதுர இனிப்புக்கள். நூற்றுக் கணக்கானவர்கள் சபையில் கூடியிருக்க எனக்கு மரியாதையாக விழாவில் ஆரவார கோலாகல சாப்பாடு......

சுஷ்மா வந்து என் தேனீர்க் கோப்பையை எடுத்துக் கொண்டு சென்றாள். ''தாத்தா! வேறு ஏதாவது வேணுமா?''

''சுஷ்மா தோட்டத்து ரோஜாச் செடிக்குத் தண்ணீர் விட்டாயா?''

''ஆச்சு!''

''பாடம் படித்தாயா?''

''அம்மா மாவரைக்கப் போக வேண்டும் என்றாள். நீங்கள் வருகிறீர்களா?''

''நீபோ, இந்தமாமாவுடன்பேசிக்கொண்டிருக்கிறேன்.''

அவள் சென்றதும் ''யாரும் இல்லாமல் இருப்பது நல்லது. என் மற்ற ருசிகளைப் பற்றிக் கொஞ்சம் தாராளமாகப் பேசலாம். நாக்கின் ருசியைவிட உன்னதமான ருசி தொடுகையின் ருசி! டச்!

அவர் தம் மடியிலிருந்து ஓர் எலும்புக் கரத்தை விடுவித்தார்! சற்றே ஒடுங்கின விரல்கள். இந்தக் கையால், தொடுகையால் இந்த விரல்கள் எத்தனை சந்தோஷங்களைக் கண்டிருக்கின்றன! சின்னக் குழந்தையின் கன்னம்! ரோஜாவின் நுனியில் ஒட்டியிருக்கும் காலைப் பொழுது! கன்னிமை மாறாத பெண்ணின் மார்பின் மொட்டு! இருட்டில்...

''க்கும்!'' என்று அடுத்த அறையில் சப்தம் கேட்க, ''சேஷு!'' என்றார்.

''நான் இங்கே இருக்கேன்பா!''

''சரி,'' முதியவர் என்னைப் புன்னகையுடன் பார்த்தார். ''இங்கே மேற்கொண்டு பேசினால் என் மகன் சேஷு ஆட்சேபணை தெரிவிப்பான். கொஞ்சம்இரு. பார்க்குக்குப் போய் விடலாம்''என்று உள்ளே சென்றார். அவர் போனதும் அவர் மகன் சேஷு எட்டிப் பார்த்தார். ''நீங்கதான் தில்லி பத்திரிகையா?'' சேஷுவுக்கே அம்பது வயதிருக்கும். தாத்தாவுக்குத் தம்பி மாதிரி இருந்தார்!

''ஆம்.''

''கிழவனாரை அதிகமாகக் கேட்காதீர்கள். சில சமயம் ரொம்ப உளறுவார்.. ஞாபகம் பிசகிக் கொண்டிருக்கிறது. செனிலிடி வந்து கொண்டிருக்கிறது. தேதிகளை எல்லாம் தப்புத் தப்பாகச் சொல்லுவார்! என்னைப் பற்றி ஏதாவது சொன்னாரா?''

''இல்லை!''

''சொல்லுவார். அதையெல்லாம் பத்திரிகையில் போடாதீர்கள். எனக்கு இலக்கியத்தில் எல்லாம் நம்பிக்கை கிடையாது! He writes books. I earn money!''

''அவர் விபத்தில் செத்துப் பிழைத்ததைப் பற்றித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்.''

''போயிருக்கலாம்! போயிருக்கலாம்!''

''என்ன?''

''நத்திங், நத்திங்! அண்ணா! சீக்கிரம் சாப்பிட வந்துவிடுங்கள். பார்க்கில் பார்த்தினியம் உங்களுக்கு ஆகாது!''

ஸ்ரீனிவாசமூர்த்தி தலையில் மப்ளர் சுற்றியிருந்தார். கொள்ளைக்காரன் மாதிரி பாதி முகத்தை மூடி அல்பாக்கா வகை கோட்டும் வாக்கிங் ஸ்டிக்கும் ராணுவத் தனமான காக்கி கலர் உல்லன் சாக்ஸுமாக பனி மனிதன் மாதிரி வந்தார். ''வா போகலாம்''

பார்க்கில் வெயில் இன்னும் பாக்கியிருந்தது. சிறுவர்கள் இரைச்சலாக வேப்பங்குச்சி கிரிக்கெட் ஆடிக் கொண்டிருக்க ஐஸ் வண்டி வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தது!

''குச்சி ஐஸ் வாங்கி சாப்பிட ஆசைதான்.''

''வாங்கித் தரட்டுமா?''

''பஞ்சு மிட்டாய் வந்தால் கூப்பிடு!'' இருவரும் பார்க் பெஞ்சில் உட்கார்ந்து கொள்ள, அவர் ''நான் என் வாழ்க்கையைப் பாதித்த மூன்று பெண்களையும் சிந்தித்துப் பார்க்க, அந்த நாட்களைப் பசிவேளையில் நினைத்துப் பார்க்க அவகாசம் கிடைத்தது. முதல் பெண் சுஷ்மா. என் பேத்தி சுஷ்மா இல்லை, அவள் ஞாபகமாகத்தான் என் பேத்திக்கு அந்த பேர் சிபாரிசு செய்தேன். இந்த சுஷ்மா மைசூர் சுஷ்மா! என் 'கனவுகளும்' என்கிற சிறுகதைத் தொகுப்பைப் படித்துவிட்டுக் கடிதம் எழுதியவள், என்னை நேசிப்பதாக! இதோ பார்'' என்று தன் அல்பாக்கா கோட்டிலிருந்து ஒரு கத்தைக் கடிதத்தை எடுத்துக் காட்டினார்!

(தொடரும்)

# பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ்
# கொண்டு வரும்

# கல்கிக்கு

## எங்கள் மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்

# VGP




பம்பாய்க் கிளை:

வி. ஜி. பன்னீர்தாஸ் & கம்பெனி,
266, தீபக் பில்டிங்ஸ்,
சயர்ன் (மேற்கு),
பம்பாய்—400 022

தொலைபேசி: 474789
485092

**வி. ஜி. பன்னீர்தாஸ்**
**சகோதரர்கள்,**

சைதாப்பேட்டை
சென்னை—600 015

ஆளுக்கு ஒரு கத்தி வைத்துக் கொள்வதை அடுத்து:

# அபாரமான ஐந்து யோசனைகள்!

* கத்தி வாரியம் அமைத்து ஒரு வாரியத் தலைவரைப் போடலாம்.
* அரசாங்கமே கத்தி தயாரித்து ரேஷன் கடைகளில் குறைந்த விலையில் விற்கலாம்.
* கத்திக்குச் சிறப்புத் தள்ளுபடி கொடுத்து விற்கலாம்.
* அமைச்சர் ஒருவரை ஜெர்மனி ஜப்பான் போன்ற நாடுகளுக்கு அனுப்பி கத்தி தயாரிப்பு பற்றிய தொழில் நுட்பங்களை அறிந்து வரச் செய்யலாம்.
* அன்று ஒரு விரல் காட்டியதே ஒரு கத்தி வைத்துக் கொள் என்று சொல்லித்தான் என்று புது வியாக்கியானம் கொடுக்கலாம்.

கோவை — 11. எஸ். லக்ஷ்மி.

* 21 ஆம் நூற்றாண்டை எதிர் கொள்ளத் துடிக்கும் பிரதமரும் கற்காலத்திற்குத் திரும்பும் திட்டம் தீட்டும் முதல்வரும் என்ற வர்ணனை முற்றிலும் சரியானதே. ஆனால் இருவரும் கைகோத்து நிற்பது (கூட்டணி) வேடிக்கையாயில்லை?

தஞ்சை — 7. அ. சம்பத்.

* பட்டுக்கோட்டை ராஜா எழுதியுள்ள "தெளிவு" சிறுகதை படித்தேன். சமுதாயப் பிரச்னையோடு எழுதப்பட்ட கதை. பாராட்டுக்கள்.

இளங்கார்குடி. கோ. பாஸ்கர்.

* இவ்வாரம் 'கல்கி'யில் டாக்டர் மோகன் குமாரின் பேட்டி, வி. பி. சிங் பேட்டி! நடிகை அமலாவின் பேட்டி! ஞானபீட பரிசு பெற்ற பன்னாலால், கவிஞர் கண்ணதாசன் பற்றிய கட்டுரைகள்! நாலு சிறுகதைகள்! இரண்டு தொடர் கதைகள்! மு. மேத்தாவின் கவிதை வரிகள்! வழக்கமான அம்சங்கள்! என்று படு அமர்க்களம் போங்கள்!

மயிலாடுதுறை. இரா. 'பழம்'

* நடிகையின் பேட்டியைப் பிரசுரியுங்கள்; வேண்டாம் என்று தடுக்கவில்லை. அதற்காக அமலாவின் பேட்டியே கவர்ஸ்டோரியாக அமைவதா? அதற்கு ஆறு பக்கங்களும், அட்டைப் படமும் தேவைதானா? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்...

வேலூர் (சேலம்). லட்சுமி செங்குட்டுவன்.

* தத்து, பித்து என்று தத்துவம் பேசாமல் 'இமேஜ்' போய்விடும் என்று அளவுடன் பேசாமல் யதார்த்தங்களை அள்ளி வீசும் அமலாவின் பேட்டி இன்றைய ஏனைய கலைஞர்களின் பேட்டியினின்றும் மாறுபட்டதே!

சென்னை — 33. கு. மு. பாப்ஜி.

* கங்கிராட்ஸ் மிஸ்டர் ராஜீவ்! நேர்மையான, திறமையுள்ள நிதியமைச்சரை எமக்குத் தந்ததற்கு. திரு. வி. பி. சிங் அவர்களின் பேட்டியில் இருந்து நிதியமைச்சகத்தில் அவருக்குள்ள புலமையையும், சில சோதனை விஷயங்களில் அவருக்குள்ள தன்னம்பிக்கையையும் புரிந்து கொள்ள முடிந்தது.

குடியாத்தம் — 2. கே. வெங்கடசுப்பிரமணியன்.

* நம்பிக்கையைத்தேக்கிவைத்து ஒருவிடியலைவேண்டி நிற்கும் அந்தப் பாலம் படமும், பாடலும்... 'சிம்ப்ளி சூப்பர்ப்!'

குடியாத்தம் — 2. ஏகலை. எம். சிவகுமார்.

* ஞானபீடப் பரிசு பெற்ற பன்னாலால் படேல் பற்றிய குறிப்புக்களோடு, பரிசு பெற்ற "மானவினி பவாயி" நாவல் பற்றிச் சுருக்கமான குறிப்பும் தந்திருந்தது மகிழ்ச்சி அளித்தது.

சென்னை — 28. எம். தியாகராஜன்.

* பட்டிதொட்டியெல்லாம் பரவலாகக் காணப்படும் கல்கி வாசகர்களை கம்ப்ளீட்டாகப் புறக்கணித்துவிட்டுப் பட்டணத்து ம. வி. பார்ப்பவர்களுக்கு மட்டும் போட்டி வைத்து வயிற்றெரிச்சலை ஏன் சார் கிளப்புகிறீர்கள்?

வடுவூர். எஸ். கண்ணன்.

* அரசியல்வாதிகளுக்காகத் தாங்கள் தேர்ந்தெடுத்த உடைகள் அருமை என்றாலும், ஸ்ரீமான் பொது ஜனத்திற்குக் கிடைத்தது நிகழ்கால யதார்த்தத்திற்கேற்ப அருமையான காஸ்ட்யூம்.

அல்லூர் (திருச்சி). கே. சீதாராமன்.

* இன்று டாக்டர் மோகன் குமார் இந்த அளவுக்கு நம்மிடையே உலா வருவதற்குப் பெரிதும் உதவிய அந்த மாவீரனின் தந்தை டாக்டர் கே. வி. சுவாமி ஒரு தெய்வப் பிறவிதான்!

மதுரை — 1. பி. எஸ். பரமசிவம்.

* 'கடவுள் ரொம்ப பிஸி'தான் ஸார்! ஆனாலும் அவ்வளவு 'பிஸி'யாக இருந்தாலும் டாக்டருக்கு ஆத்மார்த்த மான உள்ளன்புடன் சேவைசெய்ய அருணாவை அனுப்பி வைத்தாரே அதைச் சொல்லுங்கள்! டாக்டர் சார்பில் கடவுளுக்கு நன்றி கூறுவோமே.

சென்னை — 5. எம். பி. துரைஸ்வாமி.

* கவிஞரை நெகிழ்ச்சியுடன் நினைவு கூர வைத்த இரு ரசமான சம்பவங்களும் அவர் பெருமையினை அழுத்தமாகப் புலப்படுத்தின.

ஸ்ரீரங்கம். ஆர். ஸ்ரீநிவாசன்.

* தொண்டர் படை ஒன்றை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்றுதான் கலைஞர் கூறினாரேயன்றி, அ.தி.மு.க.வினர் குற்றம் சாட்டியுள்ளது போல் 'போட்டி போலீஸ் படை' அமைக்கச் சொல்லவில்லை என்பதைத் தலையங்கத்தில் தெளிவாகச் சொல்லியிருக்கலாம்.

வேலாயுதம்பாளையம். எம். சம்பத்.



தாசில்தார் தயாசாகரம் முகம் சிறுத்துப் போய் வெளியே வந்தார்.

''என்ன ஸார்?'' என்று விசாரித்தார் வெளியே காத்திருந்த டெபுடி.

''பெரிய கழுத்தறுப்பாப் போச்சு.... எவன் எவனோ வடக்கத்தியானுவ எல்லாம் கலெக்டராகவும் சப்—கலெக்டராகவும் வந்துடறான்.... நம்மைப் போட்டு வெரட்டு வெரட்டுன்னு வெரட்டறான்....''

''என்ன ஸார் வேணுமாம்?''

''இந்தச் சாப்பாடு வேண்டாமாம். ஐயா பஞ்சாபி மீல்ஸ்தான் சாப்பிடுவாராம்...!''

''அதற்கு என்ன ஸார்? ஏற்பாடு செய்வோம்!'' என்றார் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்.

''உன்னால எப்படி முடியும்? அவன் கேக்குற சாமானுங்க பேர் கூட என் வாயிலே சரியா நுழைய மாட்டேங்குது.''

''நீங்க பயப்படாதீங்க, ஸார்!'' என அபயம் தந்தார் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்.

இரண்டு ஜீப்கள் எங்கெங்கோ பறந்தன. சரியான நேரத்திற்குப் பஞ்சாபி, பெங்காலி, குஜராத்தி, பாம்பே சாப்பாடு வகையறுக்கள் காரியர் காரியராகக் கொண்டு வந்து இறக்கப்பட்டன.

முகாமிட்டிருந்த கலெக்டர் குடும்பம் சம்பிரமமாகச் சாப்பிட்டது.

தயாசாகரம் மீண்டும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்தார்.

''என்ன ஸார்! பிடிக்கலையாமா?''

''சாப்பாடு அவுங்களுக்குப் பிடிச்சது. அப்புறம் என்னையும் ஒருவழியாப் 'பிடிச்சு' விட்டாங்க... அவுங்க கேக்காமலேயே நான் ஏற்பாடு செய்திருக்கணுமாம். சொல்லும் படியா வச்சுக்கிட்டேனாம். இவுங்க ஊர் ஊரா உத்தியோகம் பார்க்க வரானுகளா? இல்லே, எங்கே எது கிடைக்கும், வெட்டலாம்னு அலையறாங்களா....?'' எனச் சலித்துக் கொண்டார் தயாசாகரம்.

ஒரு வாரம் சென்ற பின்னர்.....

''இன்னிக்கு என்னய்யா கிழமை?''

''சனிக்கிழமை....''

''எனக்கு ஒருபொழுதுதான் சாப்பாடுன்னு தெரியுமா இல்லையா?''

''தெரியாது, ஸார்!''

''தெரியாவிட்டால் கேட்க வேண்டாமா?''

''தப்புத்தான் ஸார்! இப்போ உங்களுக்கு என்ன....''

''ஏன் ஐயா, கோழியும் பிரியாணியும் சாப்பிடற நாளா இது? அந்த வெங்கடாசலபதிக்கு உகந்த நாள் ஐயா இது....''

''பழமும் பாலும் வாங்கி வச்சிருக்கேன் ஸார்!''

''ஏன் ஐயா.... பழமும் பாலும் சாப்பிட நான் என்ன சாமியாரா? உங்களோட மல்லாடத் தெம்பு வேண்டாமா?''

''நீங்க என்ன வேணும்னு சொன்னீங்கன்னா....''

''சொன்னாக் கொண்டு வந்திடுவீங்களோ.... இப்ப மணி ராத்திரி பத்து. சூடாக இட்லி, சாம்பார்... சட்னி, நெய், மிளகாய்ப் பொடி... தயிர்.''

அரை மணி நேரத்திற்குள் எல்லாம் வந்தது. யார் வீட்டிலேயோ பரக்கப்பரக்க தயார் செய்து அனுப்பியிருந்தார்கள்.

மறுநாள் மதியம் — மறுபடியும் சாப்பாட்டு வேளை.

''இது என்னய்யா சாப்பாடு?''

''அப்பளம் வடையோட விருந்து, ஸார்!''

''இதை எவன் கேட்டான்? ஒரு மட்டன், கறி எதுவுமே இல்லையா?''

''ஸார் இன்னிக்கு....''

''இன்னிக்கு என்ன இன்னிக்கு....? ஆடே அறுக்கலியா! கடை அடைச்சுட்டானா?''

''இல்லே, ஸார்.... கிருத்திகை.....''

''அட போய்யா.... கிருத்திகை அமாவாசைன்னு தினம் ஒண்ணு வந்துகிட்டிருக்கும். வேறே கொண்டாங்கய்யா....''

''சரிங்க.... பத்து நிமிஷத்திலே வருமுங்க. இந்தச் சாப்பாடு....?''

''ஜீப்லே வை! வீட்டுலே அவுங்களுக்குக் கிருத்திகை விரதம் உண்டு.''

— சொன்னவர் முன்பு கலெக்டரிடம் பாட்டு வாங்கிய அதே தாசில்தார் தயாசாகரம்தான்! விராலுக்கு ஏற்ற வீக்கம் இருக்கத்தான் செய்தது!

**— ஜனனி**

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1986.**
**ரூ500/- பரிசு பெறும் இரண்டாம் பரிசுக் கதை**

# குஞ்சானியின் டாட்டா

நா. முத்து பாஸ்கரன்

(இந்தக் கவிஞரின் முதல் சிறுகதை இது!)

"பஸ் கிளம்பிரிச்சு! நீ ஏறிக்க. குஞ்சானி! நான் சொன்னதெல்லாம் ஞாபகம் வச்சிக்க... ஒம்மா எதையாச்சும் சொல்லிக்கிட்டுத்தான் இருப்பா.... தைரியமாப் போ.... என்ன.... நா வரட்டுமா?"

கடைக்காரத் தாத்தா கையை அசைத்து விட்டுக் கிளம்பிவிட்டார். குஞ்சானியும் கையை ஆட்டிவிட்டு, பஸ்ஸில் ஏறிக் கூட்டத்தோடு நின்று கொண்டான்.

முந்தி, கடைசியாக, அப்பன் வீட்டுக்கு வந்துவிட்டுப் போன சமயம், 'டாட்டா' சொல்லப் போய் விழுந்த அடியை நினைத்துக்கொண்டான். முதுகு ஒருமுறை சிலிர்த்து அடங்கியது.

பஸ்ஸில் இரைச்சல் கலவையாயிருந்தது. 'எத்தனை பஸ் ஓடினாலும் திருவையாற்றிலிருந்து தஞ்சாவூருக்கு மட்டும் எப்பவும் கூட்டம் நெருக்கியடிச்சுக்கிட்டுத்தானிருக்கும்.'

சட்டைப் பையைத் தடவிப் பார்த்துக் கொண்டான். சின்ன ஓட்டைதான். கடைக்காரத் தாத்தா குடுத்திருந்த ரெண்டு ரூபாய் நோட்டு கையில் நெருடியது. கொஞ்சம் பழைய நோட்டுத்தான். கசங்கி வேறு இருந்தது. 'வேறே நோட்டுக் குடுன்னு கண்டக்டர் கேட்டால்...?' எறக்கி விட்டுடுவானோ?'

தெரிந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா என்று பார்த்தான். யாரும் தெரியவில்லை. நாலு முழ வேட்டியின் முனையில் உருட்டுத் தையலைத் தாண்டிக் கொஞ்சம் கிழிந்திருந்தது. வேட்டி முனையைக் காலுக்குள் இடுக்கிக் கொண்டான்.

பஸ் நடுக்கடையைத் தாண்டிக் கொண்டிருந்தது.

இந்த ஊர்ப் பக்கத்தில்தான் இவன் பிறந்தானாம். அம்மா சொல்லும். இவன் பிறந்த வருசமே அப்பன் கஞ்சி ஊத்தாது என்று ஆனதும் இவனைத் தூக்கிக் கொண்டு அம்மா திருவையாற்றுக்கே வந்துவிட்டதாம்.

ஐயாறப்பன் கோவில் தெற்கு வாசலருகில்தான் இவர்கள் இருந்தார்கள். சேர்ந்த மாதிரி மூணு வீடு. வீதியிலிருந்து செங்குத்தாய்ப் பிரிந்து அடுத்தடுத்து இருந்தது. முகப்பில் வாசலுக்குக் கொஞ்சம் தள்ளிப் பதினைந்து ரூபாயில் இவர்களின் குச்சு வீடு. முன்புறம் கேட்டருகில் கடைக்காரத் தாத்தாவின் பெட்டிக் கடை.

இவன் எப்பவும் தாத்தாவுடன்தான் நேரத்தைக் கழிப்பான். அம்மா நாலைந்து வீடுகளில் வேலையை முடித்துக் கொண்டு அவர்கள் கொடுக்கும் சாப்பாட்டில் இவனுக்கும் கொஞ்சம் எடுத்துக் கொண்டு சாயந்தரம் ஏழு, ஏழரை மணிக்குத்தான் வரும். இவன், அதுவரையும் தாத்தாவுடன்தான் இருப்பான்.

ஒண்ணாம் வகுப்பில் இவன் சேர்ந்த புதில் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் சிலேட்டுப் பலகையைக் கடாசிவிட்டுக் கோவில் தெற்கு வாசல் விளக்குக்கருகில் விளையாட்டுப் பயல்களைப் போய்ப் பார்த்துக் கொண்டு நிற்பான். அந்தப் பயல்கள் இவனைச் சேர்த்துக் கொள்வதில்லை. இவனைத் தூரத்தில் கண்டதுமே குசுகுசுவென்று பேசிக் கொண்டு 'விளையாட்டை நிறுத்திவிடுவார்கள். இவனும் கொஞ்ச நேரம் பார்த்துவிட்டுப் பழிப்புக்காட்டிக்கொண்டே திரும்பி விடுவான். 'வாச்சாங்கோலிப் பயலுக... பெரிய்ய இது பண்ணிக்கிறாங்கெ...' இவன் போவதைப் பார்த்ததும் மூணாம் வகுப்பு கிச்சாமிப் பயல் இவனுக்குக் கேட்பது போல, "டேய்! குஞ்சானியோட அப்பா ரொம்ப கெட்டவராம்டா... ஜெயிலுக்கெல்லாம் போனவராம்...." என்று சொல்லிக் கொண்டிருப்பான். இவனும் காதில் வாங்காதது மாதிரி வந்து தாத்தாவுடன் உட்கார்ந்து கொள்வான்.

அப்பன் எப்போதாவதுதான் வீட்டுக்கு வரும். அது வந்துவிட்டுப் போன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் குருக்கள் வீட்டிலிருந்து குஞ்சானிக்குச் சோறு கொண்டு வந்திருந்த

தூக்கு வாளியைக் காணுமென்று அம்மா கத்திக் கொண்டிருக்கும்.

"யார் சார் திருவையாத்துல ஏறினது. இன்னம் ஒரு டிக்கெட் வாங்கல...." கண்டக்டர் சத்தம் அருகில் வந்ததும்தான் இவனுக்கு உறைத்தது. "சார் இங்க தஞ்சாவூர் ஒண்ணு" அவசரமாக நோட்டை எடுத்து நீட்டினுன்.

"என்னய்யா நீ! எவ்வளவு நேரமாக் கத்திட்டிருக்கேன்! சில்லறையா இல்லையா....?" வாங்கிய நோட்டை வெளிச்சத்தில் பிடித்துப்



பார்த்துவிட்டு இவனை முறைத்துக்கொண்டே டிக்கெட்டையும் மீதிச் சில்லறையையும் திணித்துவிட்டுக் கூட்டத்தில் நகர்ந்தார் கண்டக்டர்.

'நல்லவேளை வேறே நோட்டுக் கேக்கலே...''

டிக்கெட்டோடு, சில்லறையை வாங்கி, கவனமாக அந்தப் பக்கம் திரும்பிக் கொண்டு வேட்டியைப் பிரித்து அண்ட்ராயரில் போட்டுக் கொண்டான்.

அப்போதுதான் பஸ்ஸில் கொஞ்ச தூரம் தள்ளி ஐயர் வீட்டுப் பாட்டியம்மா நிற்பதைப் பார்த்தான். அவர்கள் இப்போது கண்டியூருக்கே வந்துவிட்டார்களாம். குடத்தையும் ஒரு பெரிய பையையும் காலில் வைத்து இடுக்கிக் கொண்டு சங்கடத்துடன் கம்பியைப் பிடித்தவாறு நின்றிருந்தது.

திருவையாற்றுக்கு வந்த புதிதில் இவர்கள் வீட்டில்தான் அம்மா பத்துப் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்தது. நோஞ்சலாகவும், அழகாகவும் இருந்த இவனை, இந்தப் பாட்டிதான், 'குஞ்சானி.... குஞ்சானி' என்று கூப்பிட்டுப் பழக்கிவிட்டது.

அப்பனை நினைத்து இவன் பயந்து கொண்டான். 'என்ன சொல்லுவாரோ?'

அப்பனோடு பேசிப் பத்துப் பன்னண்டு வருசம் இருக்குமா?'

அப்போதெல்லாம் இவன், ''நான் பள்ளிக்கூடம் போயிட்டு வர்றேன் தாத்தாவ்'' என்று கடைக்காரத் தாத்தாவிடம்தான் சொல்லிக் கொண்டு போவான். ஒருநாள் அவர், 'டாட்டா'ன்னு சொல்லணும்டா பயலே'' என்று கூறி வைத்தார். சாயந்தரம் வந்ததும், 'டாட்டா' சொல்வது பற்றித் தொணத்தி எடுத்துவிட்டான். அவரும் வியாபாரத்தைப் பார்த்துக் கொண்டே வெளியே போகும் போது, எப்படிக் கையை ஆட்டி 'டாட்டா' சொல்ல வேண்டுமென்று விளக்கமாகச் சொன்னார்.

அடுத்த நாள் விடியற்காலையில் அம்மா கிளம்பும்போது, ஞாபகமாக எழுந்து, 'டாட்டாம்மோவ்' என்றான். அம்மாவுக்கு ரொம்பப் பெருமை. ''அடி எங்கண்ணு, டாட்டாச் சொல்லுதே எம் புள்ளே! எப்படா முளிச்சே!'' என்று கேட்டுவிட்டு, அந்த அஞ்சு மணிக்கே இவன் எழுந்து கொண்டதற்கும் சேர்த்துப் பெருமைப் பட்டுக் கொண்டு குஞ்சானிக்கு முகத்தைக் கழுவி விட்டு, நீச்சத் தண்ணியை ஒரு குவளை நெறைய எடுத்துக் கொடுத்துவிட்டு, இவன் டாட்டா சொன்னதைப் பெருமையோடு நினைத்து நினைத்துப் பார்த்துக் கொண்டே போனது.

ரொம்ப நாளைக்கப்புறம் அன்றுதான் குஞ்சானியின் அப்பன் காலையிலேயே வந்திருந்தது. அப்பனைக் கண்டதும் இவனுக்கு ரொம்ப சந்தோஷம். கணக்குப் புஸ்தகம் வாங்காததுக்காகக் கையை நீட்டச் சொல்லித் தருமு டீச்சர் இவனைப் பிரம்பால் அடித்ததையும், பிறகு ரெண்டாம் வாய்ப்பாட்டைச் சினிப் பயல் மாதிரி 'உம்' கொட்டி 'உம்' கொட்டி நிறுத்தாமல் கடகடவென்று இவன் சொன்னதுக்கு 'வெரி குட்' சொல்லிவிட்டு, அடுத்த நாள் ஒரு பழைய புஸ்தகத்தை ரெண்டாம் வகுப்பு கோவிந்தன்கிட்டேயிருந்து வாங்கிக் குடுத்ததையும் அதுக்கு இவன் காசு குடுக்க வேண்டாமென்று தருமு டீச்சரே குடுத்து விட்டதையும் சொன்னான். குஞ்சானியின் அப்பன் — செல்லத்துரை — எல்லாத்துக்கும் 'உம்' கொட்டியதோடு சரி. இவன் பள்ளிக்கூடம் போகும்போது, அப்பனுக்கு டாட்டா சொல்லிவிட்டுப் போனான். அதுக்கும் அப்பன் 'உம்.... உம்....' என்றுதான் சொன்னது.

சாயந்தரம் வந்து பார்த்தால், நடு வீட்டில் புழக்கம் தெரிந்தது. 'வீட்டுக்காரவுக வந்திருக்காக போல'. வீட்டுக்காரருக்குத் திருவையாற்றிலேயே எட்டு, பத்து வீடு இருக்குதாம். மாசம் ஒரு தரம் வந்து இருந்து எல்லாரிடமும் வாடகை வாங்கிக் கொண்டு போவார். அவர் வீட்டுப் பிள்ளைகள் திருச்சியில் கான்வென்டுல படிக்குதுகளாம். இப்ப அதுகளுக்கு லீவுன்னு புள்ளைகளையும் கூட்டிக் கொண்டு வந்திருந்தார்.

**கொ**ஞ்ச நேரம் கழித்து அப்பன் திரும்பவும் வீட்டுக்கு வந்தது ஆச்சரியமாயிருந்தது. நடு வீட்டு வாசலில் நாலைந்து சோடிச் செருப்புகளையும் ரேடியோச் சத்தத்தையும் கவனித்துவிட்டு, உள்ளே வந்து மெதுவாகக் குஞ்சானியிடம் விசாரித்தது அப்பன்.

'வீட்டுக்காரவுக வந்திருக்காகப்போவ்.''

சட்டென்று குஞ்சானியின் வாயைப் பொத்திவிட்டுக் கழற்றிய சட்டையை உடனே மாட்டிக் கொண்டு அப்பன் வெளியே கிளம்பியதும், 'எங்கப்பா போறே' என்று கேட்க வந்த குஞ்சானி அதைக் கேட்காமலேயே, 'டாட்டாப்போவ்' என்றான். அதற்குள் அப்பன் கேட்டைத் தாண்டிவிட்டதைப் பார்த்து, வாசல் படலைத் திறந்து கொண்டு, 'அப்பாவ் டாட்டா' என்று கத்தினான்.

'நடு வீட்டில் வந்திருக்கும் கான்வெண்டுப் பிள்ளைகளுக்குக் காதில் விழுந்திருக்காதோ' என்ற சந்தேகம் வந்தது. அப்பனும் ஒண்ணும் சொல்லவில்லையே! ரெண்டு மூணு வீட்டுக்கும் கேட்கிறாப்போல் நடு வாசலில் நின்று கொண்டு ''அப்பா, டாட்டாப்போவ்'' என்று மீண்டும் சத்தம் போட்டுக் கத்தினான்.

அதற்குள் வீட்டுக்காரரே வெளியே வந்து, அப்பனைப் பேர்சொல்லிக் கூப்பிட்டு நிறுத்தி விட்டார். அந்தப் புள்ளைகளும் எட்டி வெளியே பார்த்தன.

இப்போதுதான் குஞ்சானிக்குத்திருப்தியாயிருந்தது.

ஆனால், வீட்டுக்காரரிடம் பேசிவிட்டு உள்ளே திரும்பிய அப்பன்தான் இவனை, உள்ளே இழுத்துப் படலைச் சாத்திக் கொண்டு, ''என்னடா டாட்டா.... மோரக் கட்டை.....'' என்றவாறே விறகுக் குச்சியை எடுத்தது.

குஞ்சானி அன்று ராப்பூராத் தேம்பித்

# அடுத்த நூற்றாண்டை நோக்கி அதிவேகமாக முன்னேறி வெற்றிநடை போடுகிறது நெய்வேலி நிறுவனம் என்பதை எதிர்காலம் காண்கிறது.




## ஆனால் நாளைய தேவைக்கு இன்றே வலுவுடன். வனப்புடன் நெய்வேலி நிறுவனம் தயாராகிறது என்பதையும் எதிர்காலம் உணர்த்தும்.

கடந்து வந்த பத்தாண்டுகால வெற்றிப் பாதையைக் களிப்புடன் தாண்டி பல வரலாற்றுச் சாதனைகளை நெய்வேலி நிறுவனம் படைத்துள்ளது.

**பரிசுகள் குவிந்த வண்ணம் :**

இறக்குமதியைத் தவிர்க்கும் சொந்த கண்டு பிடிப்புகள். இயந்திர வடிவமைப்பை மாற்றி நன்மை பெறல், உயர்தர உற்பத்தித் திறனுக்காக பரிசுகள், தொடர்ந்து ஏழாண்டு காலமாக பாது காப்புச் செம்மைப் பரிசுகள்; அனல் மின் நிலைய ஆற்றலுக்கு ஆண்டாண்டு தோறும் பரிசுகள்; சிறுசேமிப்புக்கு, குடும்ப நலத்துக்கு, கண்காட்சிக் கவின் அரங்குகளுக்கு எனப் பல பரிசுகளைக் குவித்து வரும் நிறுவனம் நாட்டின் பத்து முதன்மைப் பொதுத்துறை நிறு வனங்களில் ஐந்தாவதாக விளங்குவதில் வியப்பென்ன?

**இருபத்தி ஒன்றும் நூற்றாண்டை நோக்கி...**

நெய்வேலி நிறுவனம், 320 லட்சம் டன் பழுப்பு நிலக்கரி அகழ்வுடனும், 3990 மெகாவாட் மின்சக்தித் திறனுடனும் இரு பத்தி ஒன்றும் நூற்றாண்டை இனிதே வரவேற்கத் தயாராக இருக்கிறது.

இந்நிறுவனத்தின் செயல் திறனை வியந்து போற்றும் குஜராத், ராஜஸ்தான், ஜம்மு காஷ்மீர் மாநிலங்கள் தம் சுரங்கத் தொழில்களுக்கு நெய்வேலியின் தொழில் நுட்ப ஒத்துழைப்பை ஆவலுடன் நாடியுள்ளன.

**நாளைய தேவைக்கு இன்றே தயாராகிறது நெய்வேலி நிறுவனம்— வலுவுடன், வனப்புடன்.**



**நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிட்.,**
(இந்திய அரசு நிறுவனம்)
நெய்வேலி-607 801 ■ தமிழ்நாடு



**நாளும் வளரும் நெய்வேலி**

admas NLC:075 Tam

தேம்பி அழுது கொண்டேயிருந்தான். முதுகிலும் பின்னந்தொடையிலும் வரிவரியாகச் சிவந்திருந்தது. கன்னத்தில் ஐந்து விரலும் அச்சாகப் பதிந்து கிடந்தது. அம்மா அழுது கொண்டே அப்பனைத் திட்டிக் கொண்டு கிடந்தது.

''துப்புக் கெட்டவங் கையை ஒடிச்சி அடுப்புல வைக்க..... புள்ளக்கி என்ன தெரியும்....? வாடகை குடுக்கப் பயந்துகிட்டு இவுக வீட்டுக்காரவுகளைப் பாக்காதது மாதிரி ஒடுவாகன்னு புள்ளைக்குத் தெரியுமா....? இது 'டாட்டா' சொன்னதுலதான் இவுகளைக் கண்டுக்கிட்டாகளாம்! அதுக்குன்னு புள்ளையைப் போட்டு இந்த அடியா அடிப்பான் ஒரு மனுசன்.... பெத்த கடனுக்கு ஒரு பிஸ்கோத்தாவது வாங்கியாந்து குடுத்திருப்பியா நீ? இப்ப அடிக்க வந்துட்டே. எங்கிட்டோ தஞ்சாவூர்ல, பஸ் ஸ்டாண்டுல சும்மாத் திரிவே, இல்லேயினா செயிலுக்குப் போவே.... ஒனக்கு என்னா தெரியும் எம் புள்ளையைப் பத்தி.....'' என்று எப்பவோ வெளியே போய்விட்ட செல்லத்துரையை மனசார எதுக்க நிறுத்தித் தனக்குத்தானே வழக்காடிக் கொண்டாள் பொட்டு.

கருந்தட்டாங்குடியை நெருங்கிவிட்டது பஸ்.

இவன் பக்கமாக வந்து இறங்கப் போன ஐயர் வீட்டுப் பாட்டியம்மா, ''டே, அம்பி! இந்தக் குடத்தைக் கொஞ்சம் எறக்கிக் குடுத்துடேன்'' என்றவள், இவன் முகத்தை நிமிர்ந்து பார்த்துவிட்டு, 'அட! குஞ்சானியோன்னோ நீ? நன்னாருக்கியோடாப்பா?' இதைச் சித்த புடி'' என்றது. குடத்தை எடுத்துக் கொடுத்துவிட்டு மீண்டும் ஏறிக் கொண்டான்.

இந்தப் பாட்டிதான் இவன் அடி வாங்கியதற்கு அடுத்த வருசம் குஞ்சானியின் அம்மாவிடம் கேட்டது. ''ஏண்டி! பொட்டு! ஒன் ஆம்படையான் தஞ்சாவூர்ல பெரிய்ய சண்டியராய்ட்டானுமே! ஏதோ எம்.எல்.ஏ.வையே சட்டையைப் புடிச்சி... ரொம்ப விவகாரமாயிடுத்தாமே!''

''ஆமா! அந்தத் துப்புக் கெட்டதைப் பத்தி எங்கிட்டக் கேளுங்க! அதுக்குக் கட்டுனவள ஞாபகமிருக்கா, பெத்த புள்ளையத்தான் ஞாபகமிருக்கா.... எவளோ ஒரு கூத்துக்காரியோடயில்ல இப்ப சவுகாசமாம்! எந்தலையில போட்ட எளுத்து இதையெல்லாம் கேட்டுக்கிட்டு இன்னமும் உசிரோட இருக்கேனே.... என்னைச் சொல்லணும்'' பாத்திரத்தை தேய்த்துக் கொண்டே சொல்லும் அம்மாவின் குரல் கிணற்றுப் பக்கமாய்த் தேய்ந்து கொண்டே போகும். பாவம் அம்மா! இவன் உடம்பிலேயே தன் உயிரையும் வைத்துக் கொண்டு பாத்திரங்களோடு தேய்ந்து கொண்டே போனது.

அப்பனைப் பற்றிக் கடைக்காரத் தாத்தாதான் அவ்வப்போது குஞ்சானியிடம் சொல்வார்.

எதிர்க் கட்சி எம்.எல்.ஏ.வுடனான தகராறில் செல்லத்துரை பிரபலமாகி மறுபடியும் ஜெயிலுக்குப் போனானாம். இந்த முறை ஆளுங் கட்சியின் பெரிய வீரனாக பெயிலில் வந்தான். அப்புறம் இடைத் தேர்தல், எதிர்க் கட்சிக் கூட்டங்களில் இவன் தலைமையில்தான் சோடா பாட்டில், சைக்கிள் செயின் பறக்குமாம். பத்து இருபது பேர் ஆஸ்பத்திரிக்குப் போவார்கள். நாலைந்து பேர் போலீஸ்ஸ்டேஷனுக்குப் போவார்கள்.

சாராயக் கடை ஏஜெண்டுகளும், காண்ட்ராக்டர்களும் கட்சிக் கரை வேட்டிகளுமாய்ப் புதிதாகக் கட்டிய வீடு தஞ்சையில் பிரபலமானது.

அந்தப் பக்கம் வரும்போது 'துரையண்ணனைப் பார்க்க மந்திரிகளும் வருவார்களாம். ரெண்டு மூணு டாக்ஸி, லாரிகளோடு சினிமாத் தியேட்டர்கூட இருக்குதாம்.



''உன் தம்பி கனே கனேயா சம்பாதிக்கிறதா நீ சொல்றே; ஈ ஓட்டிட்டிருக்கான்னு என் மவன் சொல்றான். எது சரி?''

''ரெண்டும்தான். அவன் செய்யறது பனம்பழ வியாபாரம்.''

ஒவ்வொருசமயம்தாத்தா இதையெல்லாம் சொல்லும்போது இவனுக்கு ஆச்சரியமாயிருக்கும். திருவையாற்றிலேயே ஒரு சமயம் நடந்த கூட்டத்தில் பெரிய மனிதர்கள் மத்தியில் அப்பனைப் பார்க்கும்போது ஆசையாகவும் பயமாகவும் இருக்கும். எட்டியிருந்து பார்த்துவிட்டுப் போய்விடுவான்.

அம்மாவுக்குப் போன வருசம் ஒரு காய்ச்சல் வந்தது.

சத்திரம் ஆஸ்பத்திரியில் மருந்து வாங்கிச் சாப்பிட்டும் தீரவில்லே. வேலைக்குப் போக முடியறதில்லேன்னுதான் அம்மாவுக்கு ரொம்ப வருத்தம்.

அந்தமாமாங்கத்து மிசின் ரிப்பேராகிவிட்டது.

திருவையாற்றுக்கே உரிய யானைக்கால் வியாதி.

தத்தித் தப்பிளிச்சு இவன் படித்த படிப்புக்கோ, பழக்கத்துக்கோ யாரும் வேலை தரவில்லே. தியாகராசர் சமாதித் துறையில் காவிரியைப் பார்த்துக் கொண்டே எவ்வளவு நாள்தான் உட்கார்ந்திருக்க முடியும்?

கடைக்காரத் தாத்தாதான் எல்லாத்தையும்எடுத்துச்சொல்லி அம்மாவுக்குத்தெரியாமல் குஞ்சானியை பஸ் ஏற்றி அனுப்பி வைத்தார்.

'மந்திரிக்கெல்லாம் தெரிஞ்சவர் உனக்கு ஒரு வேலைக்கு ஏற்பாடு பண்ண மாட்டாரா?'

தஞ்சாவூர் பஸ் ஸ்டாண்டில் இறங்கினான் குஞ்சானி. அப்பன் வீட்டை விசாரித்துக் கொண்டு வருவது ஒன்றும் சிரமமாயில்லே. ஆனால், இவன் ''செல்லத்துரை அவுங்க வீடு எங்கிட்டு இருக்குதுங்க?'' என்று கேட்டதும் இவனை ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டே, ''துரையண்ணன் வீடுதானே?'' என்ற கேள்வியோடுதான் வழி சொன்னார்கள்.

வீடு பெரிதாகத்தான் இருந்தது.

சுற்றிலும் தென்னை மரம். பூஞ்செடிகள். ஏழெட்டுப் பேர் வெளியிலும் ரெண்டு மூணு பேர் வீட்டு வராந்தாவிலும் நிற்பது தூரத்திலேயே தெரிந்தது. காம்பவுண்டுக்குள் வராந்தாவை ஒட்டி ரெண்டு கார் நின்று கொண்டிருந்தது.

தயங்கித் தயங்கி வீட்டை நெருங்கினான் குஞ்சானி.

அப்பா இருப்பாரோ இல்லியோ? இருந்தாலும் என்ன சொல்லுவாரோ? அவரைப் பார்த்துப் பேசிப் பத்துப் பன்னண்டு வருசமாச்சே....! ஹூம்!

ஒரு வேலைக்காக அப்பனைப் பாக்கப் போவது தெரிந்தால் அம்மா என்ன சொல்லுமோ?' என்ற குழப்பங்கள் அவனை மேலும் சங்கடப்படுத்தின.

'அட துப்புக் கெட்டவனே!' என்று மனசுக்குள் வந்து திட்டியது அம்மா.

வேட்டி அண்ட்ராயரில்மிச்சக்காசு பத்திரமாக இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டான். 'காசு பத்தலயின்னு மேலத் தெரு மதிகிட்டத்தான் போய்க் கேக்கணும்..... தருவான்.'

வராந்தா பெஞ்சியில் உட்கார்ந்திருந்தவர்கள் எழுந்தார்கள். வீட்டுக்குள்ளேயிருந்து இரண்டு பேர் வந்தார்கள். படியிறங்கிக் கார்க் கதவைத் திறந்து ஒரு காலை காருக்குள் வைத்துக் கொண்டு திரும்பிப் பேசியவர் முகத்தைக் குஞ்சானி கவனித்தான். இதே வீட்டுக் காம்பவுண்டுச் சுவர் போஸ்டரில் இவர் முகம் இருக்கிறதே!

கூடப் பேசிக் கொண்டிருந்தவர்தான் அப்பா! படபடத்துப் போனான் குஞ்சானி. தொப்பையும் முகமெல்லாம் பிதுங்கிய சதையுமாய் உருவமே மாறியிருந்தது. கண்ணுக்கருகே அந்தப் பழைய தழும்புதான் அப்படியே இருந்தது.

கார் கிளம்பியதும் உள்ளேயிருந்தவருக்கு 'டாட்டா' காட்டியது அப்பன்! இவனுக்குத் திக்கென்றது. இவனையும் எல்லோரோடும் பார்த்துச் சிரித்துக் கொண்டே 'துரையண்ணன் உள்ளே போனதும் அதுவரை வெளியே நின்றிருந்த கூட்டம் வராந்தாவுக்குப் போக முனைந்தது.

குஞ்சானியோடு இன்னொரு அழுக்கு வேட்டிக்காரனையும் வெளியே நிறுத்திவிட்டான், வாசலில் நின்றிருந்தவன்.

'ப்ச்! முனையில் கிழிந்திருந்த வேட்டித் தலைப்பையாவது மாத்திக் கட்டிக்கிட்டு வந்திருக்கலாம்.....!'

''அண்ணே! நான் அய்யாவைப் பாக்கணு முன்னே மன்னார்குடியிலேர்ந்து வாரேன்...'' அந்த அழுக்கு வேட்டிக்காரன் தொடங்கியதுமே வாசல்காரன் இவனைப் பார்த்தான். அலட்சியப் பார்வை.

குஞ்சானி அவனிடம், ''நானும் அய்யாவை... வந்து.... துரையண்ணனை... இல்ல.... வந்து....' வார்த்தை தட்டித் தடுமாறி நின்று போனது.

அப்புறம் அந்த மன்னார்குடிக்காரனும் உள்ளே போய் வந்த பிறகு ரெண்டு மூணு பேரோடு பேசிக் கொண்டே வெளியே வந்து காரில் ஏறிய துரையண்ணன், கதவை அறைந்து சாத்திக் கொள்ளத் தூசியைக் கிளப்பி விட்டுக் கார் கிளம்பியது.

நின்றிருந்தவர்களுக்குக் காரிலிருந்து கை அசைந்து 'டாட்டா' காட்டியது. எட்டத்தில் தனித்து நின்ற இவன் கையும் தொங்கிய வண்ணமே மெதுவாக அசைந்தது!

# புதிய மேம்படுத்தப்பட்ட கேர்ஃப்ரீ

# கூடுதலான பாதுகாப்பு உணர்வுக்கு

**இப்போது ஒப்பற்ற நீல நிற பிளாஸ்டி-ஷீல்டு அதிகரிக்கப்பட்டுள்ளது**

அடுக்கின் அடியிலும் பக்கங்களிலும் சுற்றியுள்ள நீல நிற பிளாஸ்டி-ஷீல்டு இப்போது அதிகரிக்கப்பட்டுள்ளது. கறை ஏற்படாமல் தடுத்து கசிவு ஏற்படாத முழுமையான பாதுகாப்பு தருகிறது.

முழுமையான சுக உணர்வு. முழுமையான பாதுகாப்பு உணர்வு ஆகியவற்றைவிட வேறு ஒன்றும் அவ்வளவு முக்கியம் அல்ல.

கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின் ஒப்பற்ற மென்மையான ஒன்டர்ராப் கொண்டது; இது ஈரத்தை உள் அடுக்கிற்குள் உறிஞ்சிக் கொண்டு உலர்வான சுகமான உணர்வைத் தருகிறது உங்களுக்கு—எப்பொழுதுமே. சரிப்படுத்தக்கூடிய டேப் முனைகள், நாப்கினை கச்சிதமாகவும், பாதுகாப்பு வசதியோடும் உங்களுக்கு பொருந்த வைக்கிறது.

கேர்ஃப்ரீ சுகம் மற்றும் கேர்ஃப்ரீ பாதுகாப்பு உணர்வைப் பெற்றிடுங்கள் இன்றே. உணர்ந்திடுங்கள் வேறுபாட்டுச் சிறப்பை.

**Carefree®**

சானிடரி நாப்கின்

முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு




ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

10 உள்ள பேக்கிலும் சிக்கனமான 20 மற்றும் 30 உள்ள பேக்கிலும் கூட கிடைக்கின்றன. கேர்ஃப்ரீ சானிட்டர் வார் 10 உள்ள பேக்கில் கிடைக்கிறது.

OBM/8306/R-4/TAM

# மூட்டு நோவு இவரைக் கட்டிப்போட விடலாமா?




## உங்கள் கைகளிலேயே குணப்படுத்தும் சக்தி...

பாசமிக்க மென்மையான உங்கள் கைகளின் ஸ்பரிசம், கூடவே குணப் படுத்தும் சக்திமிக்க அயொடெக்ஸ்— இவருக்குத் தேவை. எனவே கைவசம் இருககட்டும் அயொடெக்ஸ். ஏனெனில் பாதிக்கப்பட்ட திசுக்களைக் குணப் படுத்தும் அயொடின் மற்றும் வலி தணிக்கும் மீத்தைல் ஸலிஸிலேட் கொண்ட பாம் அயொடெக்ஸ்.

அயொடெக்ஸ் இருமுறை தினம் தடவ இருமடங்கு குணம்,

வலிதணியும் வரை, தினம் இருமுறை அயொடெக்ஸ் தடவ டாக்டர்கள் பரிந்துரைக்கின்றனர்... பின்னரும் இருதினங்கள்... ஏனெனில், வலி ஒரு அடையாளம் மட்டுமே. நிஜமான பிரச்சினை, திசுக்களின் உள்ளார்ந்த பாதிப்பு.

எனவே உமது அன்புக்குரியோருள் யாரேனும் மூட்டு நோவு, தசைப்பிடிப்பு களுக்கு, உடல்வலி இவற்றால் துன்புறு கையில், சிறிது அயொடெக்ஸ் தடவித் தேயுங்கள். தினம் இருமுறை இரு மடங்கு வேகமாக அவர்கள் தத்தம் வேலைகளை கவனிக்கத் தொடங்குவர் உங்களை அன்போடு நினைப்பார்கள்

**அயொடெக்ஸ்®** - குணப்படுத்தும் சக்திகொண்ட பாம்

**SKOF** - ஓர் எஸ்கேஃப் தயாரிப்பு

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

> போன அத்தியாயத்திற்கு ரிவர்ஸ் கியரில் ஒரு பயணம்:
>
> சென்னை. விமான நிலையம். ஆகஸ்ட் இரவு 9. பெங்களூரிலிருந்து வரும் அசோக், வரவேற்க வந்த பிரேமாவின் காதலன். தன் அப்பாவைத் தீவிரமாய் வெறுப்பவன். இவன் எதிர்ப்பை மீறி அப்பா செய்து கொண்ட ரகசிய இரண்டாம் திருமணத்தின் வரவேற்பு நாளைக்கு. கோபமாய் வந்திருக்கும் அசோக் ஒரு ஜீன்ஸ் பாண்ட்டன் பைக்கில் தன்னைத் தொடர்வதை உணராமல் ஹோட்டலில் தங்குகிறான். பிரேமாவை அனுப்பிவிட்டுத் தேடி வந்த நண்பன் கதிரை அறைக்கு அழைத்துச் செல்ல... பைக் வாலா பொது போனில், "வந்தாச்சு;ஹோட்டல்லே தங்கியிருக்கான். நம் செயலுக்கு இந்தப் பொது இடம் லாயக்கில்லே" என்று சொல்ல... இங்கே அறையில் கதிரிடம் முதல் அத்தியாயத்தின் கடைசி வரியாக அசோக் கேட்ட கேள்வி:
>
> "சொல்லு கதிர். மாட்டிக்காம ஒரு கொலையை எப்படிச் செய்யலாம்?"

## 2

நீளுக்கிலும், நெடுக்கிலும் கோடுகள் ஓடி ஆயிரம் சதுரங்கள் சுமந்த முரட்டுச் சட்டை அணிந்திருந்த கதிர், கவிழ்த்துக் கொண்டிருந்தபீர் பாட்டிலை நிமிர்த்திவிட்டுக் கேட்டான்:

"என்ன சொன்னே?"

"ஒரு கொலையை எப்படியெல்லாம் மாட்டிக்காமல் செய்யலாம்னு கேட்டேன்" என்றான் அசோக்.

ஏர் கண்டிஷனரின் பின்னணி சுருதி மாறாமல் இருந்தது. கிளாஸ் டம்ளரில் பீரின் நுரை அடங்காமல் இருந்தது. சிகரெட் பற்ற வைத்த கதிரின் லைட்டரில் பெட்ரோல் தத்தளித்தது.

"புரியலே அசோக். அப்படி உனக்கு என்ன அவசியம்? யாரை?"

வெளியேற்றிய முதல் புகை விட்டம் நோக்கிப் பரவிக் காற்றில் கடத்தப்பட்டுக் கொண்டிருக்க...

"இல்லே கதிர். என் கேள்வியைத் தப்பாப் புரிஞ்சுக்கிட்டே நீ! எனக்குக் கொலை செய்யற அளவுக்குப் பகை யார் இருக்காங்க? கதிர் பெங்களூர்ல இருந்தப்போ என்னைக் கொலை செய்ய ஒரு முயற்சி நடந்திச்சு!"

"நிஜமா?"

"ராத்திரி படுக்கறதுக்கு முன்னாடி எங்க பங்களாலேர்ந்து மெயின் ரோடு வரைக்கும் ஒரு வாக் போய்ட்டு வருவேன். ஒன்பது மணிக்கெல்லாம் அமைதியாகிற ஏரியா அது. பத்து மணிக்கு மேல் நான் வாக் போறப்போ ரோட்ல ஒரு ஜீவன்கூட இருக்காது. மூணு நாள் முன்னாடி எனக்குப் பின்னால லைட் போடாம, ஹார்ன் அடிக்காம ஒரு வேன் படுவேகமா வந்து மோதப் பார்த்திச்சி. நான் கடைசி நிமிஷத்திலே சுதாரிச்சி பிளாட்பாரத்திலே ஏறிட்டேன். நான் நம்பர் பார்க்கிறதுக்குள்ளே வேன் மறைஞ்சிடுச்சி. இதோ பார்த்தியா."

அசோக் தன் முழுக்கைச் சட்டையை உயர்த்தி முழங்கை அருகே காய்ந்திருந்த சிராய்ப்புகளைக் காட்டினான். "பிளாட்பாரத்திலே தடுமாறி விழுந்ததிலே ஏற்பட்டது இது."

கதிர் தன் கிளாசைக் காலி செய்து வைத்து மறுபடி நிரப்பிக் கொண்டே, "அசோக், அந்த வேன் உன்னைக் கொலை செய்யற நோக்கத்தோடே வந்திச்சின்னு

எப்படிச் சொல்றே? அந்த டிரைவர் குடிச் சுட்டுத் தாறுமாறு ஓட்டிக்கிட்டு வந்திருக்கலாமே,'' என்றான்.

''இல்லே கதிர். அந்த வேன் என்னைக் குறி வச்சுத்தான் வந்திச்சி. திட்டம் போட்டு லைட்டை அணைச்சுட்டு வந்திச்சி. அந்தக் கடைசி நிமிஷம் நான் கவனிக்கலேன்னு பேப்பர்ல என்னைச் செய்தியா படிச்சிருப்பே, அத்தனை வேகம்.''

''போலீஸ்ல கம்ப்ளெண்ட் கொடுத்தியா?''

''இல்லே.''

''ஏன்?''

''வேன் நம்பரை நான் கவனிக்கலே. சொன்னு போலீஸ் இதை ஒரு புகாரா எடுத்துப்பாங்களான்னே தெரியலே. நீங்கதான் சார் ஓரமா நடக்கணும்னு எனக்குத்தான் அட்வைஸ் பண்ணுவாங்க.''

''அசோக், பயப்படறியா?''

''கொஞ்சம்.''

''உனக்கு யார்டா பகை?''

''என் சொத்து! மெட்ராஸ்ல உள்ள டெக்ஸ்டைல் மில்! சிக்மகளூர்ல இருக்கிற காப்பி எஸ்டேட்ஸ்! பெங்களூர்ல, ஊட்டில இருக்கிற பங்களாக்கள்! ஷேர்ஸ்! டயமண்ட்ஸ்! பாங்க் டெபாசிட்ஸ்!—இதெல்லாம்தான் என் பகை.''

''என்ன சொல்ல வர்றே? உன்னைக் கொல்றதாலே இதெல்லாம் யார் அடைய முடியும்? எல்லாம் உங்க அப்பா பேர்ல உள்ள சொத்துக்கள்தானே?''

''உண்மை. இவ்வளவு சொத்துக்கும் ஒரே வாரிசு நான். இதுவரைக்கும் இதிலே சிக்கல் இல்லாம இருந்திச்சி. இப்போ என்னை விட ரெண்டு வயசு குறைவா எனக்கு ஒரு சித்தி வந்து சேர்ந்திருக்காளே... கதிர், ஏற்கெனவே உன்கிட்டே சொல்லியிருக்கேன் நான். மாயா ஒரு பெரிய திட்டத்தோடதான் எங்கப்பாவை வளைச்சுப் போட்டிருக்கா. அவங்க ரெண்டு பேருக்கும் டிவைன் லவ்வுன்னு என்னை நம்பச் சொல்றியா?''

ஆஷ்ட்ரேயில் சிகரெட்டை நசுக்கிவிட்டு, கதிர் எழுந்து கட்டிலில் சுதந்திரமாகப் படுத்துக் கொண்டு, ஒரு தலையணையை எடுத்து மார்பில் அணைத்துக் கொண்டு, ''மாயாதான் ஆள் வச்சி உன்னைக் கொல்லப் பார்க்கிறா. இதுதானே உன் சந்தேகம்?'' என்று கேட்டான்.

''ஆமாம். எனக்கு விபத்து நடந்தா அதிலே அவளுக்கு எவ்வளவு லாபம்னு புரிஞ்சுக்கிட்டியா?''

''மாயாவோட அண்ணன் சுகுமார்தான் திட்டம் சொல்லியிருக்கணும் அசோக். ஆட்டோமொபைல் வொர்க்ஸ் வச்சிருக்கிறவனுக்கு வேனை ஏத்திக் கொல்ற திட்டம் தான் மனசுக்கு வரும்.''

''கதிர், எனக்குப் பாதுகாப்பு வேணும். பெங்களூர்ல எங்க பங்களாவை விட்டுப் புறப்பட்டதுக்கு முதல் காரணம் ஜாக்கிரதை உணர்ச்சி. நேரா எங்க பங்களாவுக்குப் போகாமல் பொது இடம்கிறதாலே ஹோட்டல்லே தங்கினதுக்கும் அதான் காரணம்.''

அசோக், நீ தேவைக்கதிகமா பயப்படறேன்னு நினைக்கிறேன். கொலைசெய்யறதெல்



லாம் அவ்வளவு சுலபமா என்ன?''

''அதையே தொழிலா வச்சிருக்கிறவங்களுக்கு நெருப்புக் குச்சி கிழிக்கிற மாதிரி சுலபம்தான் கதிர்.''

''எத்தனை வகையிலே கொலை செய்யலாம்னு எதுக்குக் கேட்டே?''

''அத்தனை வகையிலேயும் நான் ஜாக்கிரதையா நடந்துக்கத்தான்.''

''எத்தனை நாளைக்கு இப்படி பயந்து பயந்து இருப்பே?''

''இன்னும் கொஞ்ச நாளைக்கு.''

''அதென்ன கணக்கு? அதுக்கப்புறம்?''

''எங்கப்பாகிட்டே பேசப் போறேன். எனக்குன்னு சில சொத்துக்களை எழுதி வாங்கிக்கப்போறேன். அதுக்கப்புறம் மிச்ச சொத்துக்களை அவர் எவளுக்கு வேணும்னாலும் தந்துட்டுப் போகட்டும். அத்தனை சொத்தும் என்னைத்தான் சேர்ந்தாகணும்ங்கிற பேராசையோ, பிடிவாதமோ என்கிட்டே இல்லை.''

''எல்லாம் உங்கப்பா சுயமா சம்பாரிச்சதா அசோக்?''

''சொத்தைப் பெருக்கினது இவர்தான். அடிப்படை அமைச்சவர் எங்க தாத்தா. அவர் விட்டுட்டுப்போன ஒரு வீட்டை வித்துத்தான் வியாபாரம் ஆரம்பிச்சார் அப்பா. அதனால் அப்பா தன் இஷ்டத்துக்கு யாருக்கும் எழுதி வச்சிட முடியாது. கோர்ட்டுக்குப் போக எனக்கு உரிமைகள் உண்டு.''

''உங்கப்பாவுக்குத்தான் உன்மேல் பரிபூரண வெறுப்பாச்சே அசோக். பிரச்னை சுமுகமா முடிஞ்சுடுமா?''

''முடியணும். முடிய வைப்பேன்,'' என்று அதுவரை குடிக்காமல் வைத்திருந்த தன் பீர் பாட்டிலை மடமடவென்று குடிக்க ஆரம்பித்தான் அசோக்.



**ப**ரத், ஹிந்து ஞாயிறு இதழில் மேட்ரிமோனியல் பகுதி பார்த்துக் கொண்டிருக்க...

கதவைத் தட்டாமல் உள்ளே வந்த சுசிலா, அவன் தன்னைக் கவனிக்காததை உணர்ந்து கைப்பையை ஓசையின்றித்திறந்து, லிப்ஸ்டிக் எடுத்துக் கொண்டு பைய நடந்து பின்புறம் நின்று, முதுகில் லிப்ஸ்டிக் முனையைப் பொருத்தி, ஆண் குரலில், ''ஹேண்ட்ஸ் அப்'' என்றாள்.

கொஞ்சமும் அசையாமல் பரத், ''சரி, குரல் எல்லாம் ஆம்பளை மாதிரிதான் இருக்கு. ஆனா எதிர்ச் சுவத்திலே விழுந்திருக்கிற நிழல்ல கழுத்துக்குக் கீழே அப்படித் தெரியலையே மேடம்'' என்றான்.

முன்னால் வந்து அமர்ந்து கொண்ட சுசிலா, ''என்ன மேட்ரிமோனியல் பார்க்க ஆரம்பிச்சிட்டீங்க பரத்?'' என்றாள்.

''அது இருக்கட்டும். நீ எப்போ திருந்தினே... பனியன்ல வசனத்தைக் காணுமே...''

''முதுகுப் பக்கம் இருக்கு பரத். வாண்ட்டு ரீட்?'' என்று எழுந்த சுசிலா, அவசரமாக நாக்கைக் கடித்துக் கொண்டு, ''அய்யய்யோ!'' என்றாள்.

''ஏன், என்னாச்சு சுசி?''

''நாம ரெண்டு பேரும் ராங் என்ட்ரி கொடுத்தாச்சு பரத். 'என்னைக் காணவில்லை'ல நாம வர வேண்டிய சீன் இது இல்லே. இன்னும் ரெண்டு, மூணு அத்தியாயம் கழிச்சுத்தான் வர்றோம். மறந்துட்டீங்களா?'' என்றாள்.

''அட! ஆமாம்'' என்றான் பரத்.

**ப**ல்லவன்கள் கர்ப்பம் சுமக்கும் காலை. பைப்படிகளில் விட்ட இடத்தில் இருந்து சண்டைகளின் தொடர்ச்சி. 'நீ ரொம்ப பத்தினியாடி? உன்னைப் பத்தித் தெரியாதா எனக்கு? பொட்டிக் கடை வெங்கடேசனோடை சேர்ந்து நீ அடிக்கிற கொட்டம்தான் ஊர் பூரா நாறுதே...' பேப்பர் சுருட்டி எடுத்துச் செல்லும் தாவணிப் பெண்கள் கழிசடைடைப் மெஷின்களில் 'asdfgf;lkjhj' என்று மீண்டும் மீண்டும் அடிக்க...

அசோக் நகரில் அந்தப் பங்களா வாசலில் அல்சேஷன், திருடன் வந்தால் குரைப்பதற்கு ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்க... சங்கிலியுடன் சேர்ந்த அதன் குதியலைப் போர்ட்டிகோவில் நின்ற நீல நிற காண்டசாவின் கதவு பிரதிபலித்துக் கொண்டிருந்தது. முன் கேட்டில் கஞ்சி போட்டுக் குளித்த உடையில் வாட்ச்மேன். போர்ட்டிகோ வரையில் நீளமான கால் வட்டப் பாதை. இரண்டு விளிம்புகளிலும் இடுப்புயரத்திற்குச் சீராகக் கத்தரிக்கப்பட்ட செடிகள். அந்தப் பக்கம், இந்தப் பக்கம் ஒவ்வொரு மலரிலும் ஒவ்வொரு வர்ணம். இரும்புத்தூண்கள் நட்டு நடுவில் பொருத்தப் பட்ட ஊஞ்சல் காற்றில் லேசாய் அசைந்தது.

உள்ளே படுக்கையறையில் நாகராஜன் கண்ணாடி முன் தன் டையின் மேல் வைரக் கல் பதித்த பின்னைப் பொருத்திக் கொண்டு திரும்பிக் கட்டிலைப் பார்த்தார்.

மெல்லிசான நைட்டியில் பிராக்கெட் மாதிரி வளைந்து படுத்திருந்த மாயா, ''மில்லுக்குப் புறப்பட்டாச்சா டியர்?'' என்றாள்.

''ஆமாம் மாயா. ஈவினிங் ரிஸப்ஷனுக்காக டெல்லியிலிருந்தெல்லாம் சில கெஸ்ட்ஸ் வர்றாங்க. அவங்களைத் தங்க வைக்க ஏற்பாடுகள் செய்யணும். அவசரமா நான் கையெழுத்துப் போட வேண்டிய வேலைகள் வேறே இருக்கு. உன் புரோக்ராம் என்ன?''

''குளிச்சுட்டு பியூட்டி பார்லர் போய்ட்டு வந்துடறேன். லஞ்சுக்கு உங்களை எதிர் பார்க்கட்டுமா?''

''அவசியம் வர்றேன் மாயா, வரட்டுமா?''

''ஒரு நிமிஷம்'' என்று கட்டிலை விட்டுக் குதித்திறங்கி அவரை நெருங்கி அவரின் வகிட்டின் ஓரத்தில் இருந்த ஒரு வெள்ளை முடியைப் பிடுங்கி, ''வெள்ளி முடி'' என்றாள்.

''ச்சே! இது சிந்தனை நரை மாயா. ஐயாம் ஃபிஃப்டி டூ இயர்ஸ் யங்.''

''உண்மை. சமயத்திலேதான் உங்களுக்கு காம்ப்ளக்ஸ் வந்துடுது டியர். இங்கிலீஷ் படங்களிலேயும், கதைகளிலேயும் கதாநாயகர்களுக்கு வயசு அம்பதுக்கு மேல்தான். அழகு நிரந்தரமில்லாதது. நான் விரும்புறது உங்க அன்பையும், அனுபவத்தையும்!''

''அனுபவம்னு?'' என்று அவர் கண்ணடிக்க...

''ச்சீ! போங்கடியர்.'' என்று நாடக பாணியில் வெட்கப்பட்டு, ''ஏங்க, அசோக் வருவார் இல்லே?'' என்றாள்.

''எல்லாருக்கும் போல அவனுக்கும் அழைப்பு போயிருக்கு. வரலாம். வரணும்னு நான் விரும்பலே. ஏன்னா அவன் இந்தக் கல்யாணத்தை விரும்பலே. வாழ்க்கையை அதன் போக்குக்கு வாழ விரும்புற எனக்குத் தப்பிப் பொறந்துட்டான். டூ மச் ஆஃப் செண்டிமெண்ட்ஸ். சரி, புறப்படறேன்'' என்று அவளது கன்னத்தில் தட்டிவிட்டு, சிறிய சூட்கேசை எடுத்துக் கொண்டு வெளியேறிப் படிகளில் இறங்கினார்.

''கணேசன்!''

மாடிப் படியின் கடைசிப் படியில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த பாண்ட் அணிந்த, குங்குமம் வைத்த கணேசன் சட்டென்று புத்தகத்தை மூடி வைத்து விட்டு எழுந்து சூட்கேசை வாங்கிக் கொண்டு கூட நடந்தான்.

''காய்கறி வாங்கிட்டு வர்றப்போ, சின்னம்மாவுக்கு ஏதாச்சும் வேணும்னா வாங்கிட்டு வந்து கொடு. அம்பாஸிடரை ஷெட்லேர்ந்து எடுத்து பெட்ரோல் நிரப்பிக் கொண்டாந்து வச்சிடு. ஜன்னல் ஸ்க்ரீன் எல்லாம் மாத்திடு. பாத்ரூம்ல பைப் லீக் ஆகுது. கவனிச்சுடு.''

ஒவ்வொரு கட்டளைக்கு நடுவிலும் ''சரிங்க சார்'' என்று சொல்லி, காருக்கு வந்ததும் கதவு திறந்து பிடித்துக் கொண்டான் கணேசன். தூரத்தில் நின்ற டிரைவர் சுக்கத்தில் இருந்து தொப்பி எடுத்து அணிந்து கொண்டு வந்து, ''குட்மார்னிங் சார்'' என்றான். ஸ்டார்ட் செய்தான். அல்சேஷன் எம்பிக் கொண்டிருந்தது.

ராஜ் டெக்ஸ்டைல்ஸ் மில்லின் அலுவலகத்தில் தன் அகலமான அறையில், பதினொரு மணிக்குப் பூனாவுக்கு ஃபோன் போட்டுப் பேசி முடித்த பின்னர் ஒலித்த டெலிபோனுக்கு ''யெஸ்'' என்றார் நாகராஜன்.

''சூசை என்பவர் உங்களுடன் போனில் பேச விரும்புகிறார் சார். லோகல்!'' என்ற ஆங்கில, பெண் குரலுக்கு...

உடனே சற்று வியர்த்துப் போய், ''இருஸ் டெல்லா. நான் வச்சிடறேன். என் பிரைவேட் போன்ல கனெக்ட் பண்ணு'' என்று வைத்து, சிகரெட்டை ஆஷ்ட்ரேயின் பள்ளத்தில் வைத்துவிட்டு, பிறர் புரிந்து கொள்ள முடியாத ஸ்கிராம்ப்ளர் பொருத்தப்பட்ட தன் பிரைவேட் டெலிபோன் ஒலித்ததும் எடுத்தார்.

''சூசை, எந்த சந்தர்ப்பத்திலேயும் என்னை போன்ல கூப்பிடக் கூடாதுன்னு சொல்லியிருக்கேனில்லே? இடியட். என்ன விஷயம்?''

''என்னங்க சார் திட்றீங்க? எனக்கு நீங்கதான் சொல்லலே. ரெண்டாம் கல்யாணம் பண்ணிக்கிட்ட விஷயத்தை நானு கேள்விப்பட்டு, இன்னிக்கு ஹோட்டல்ல பிரமாதமான விருந்துன்னு கேள்விப்பட்டு, வாழ்த்தலாம்னு கூப்பிட்டா, திட்டறீங்களே... எங்கே இன்னொரு தடவை திட்டுங்க. பார்க்கலாம்?''

''என்ன செய்வே?''

''போனை வச்சிடுவேன். வச்சிட்டு ஒண்ணு, சைபர், சைபர் சுத்துவேன். சுத்தி... இந்த மாதிரி என் பேரு சூசைங்க. நம்ம மில் ஓனர் நாகராஜன் சார் இருக்காருங்களே... அவரு... என்ன, போனை வச்சிடவா?''

''டாமிட்! என்ன வேணும் உனக்கு?'' என்றார் நாகராஜன் ஆத்திரமாய்.

''உன் உயிர்!''

(தொடரும்)

# உல்லாச அகதிகள்



பல ஆண்டுகளுக்கு முன் ஏராளமான சிந்திக்காரர்கள் அகதிகளாக பம்பாயில் குடியேறினர்




காமராஜர் பம்பாய் வந்தபோது.....
ஐயா! இந்த இடத்துக்கு ஒரு பெயரிடுங்கள்.




நீங்க அகதிகளாக வந்தீங்க; ஆனாலும் மகிழ்ச்சியா வாழணும். உல்லாச நகர்னு பேர் வைக்கிறேன்.




இன்று உல்லாச நகரில் கிடைக்காத பொருளே கிடையாது....
விலை கூட மலிவா இருக்கே!




இதைப்பாரு, MADE IN U.S.A.ன்னு போட்டிருக்கு!




ஸார்! நீங்க பம்பாய்க்கு புதுசு போலிருக்கு. இந்த U.S.A க்கு அர்த்தம் உல்லாசநகர் ஸிந்தி -அசோஸியேஷன்!

# உழைக்
# உயர்கி

**சென்னைக்கு அடுத்தபடி அதிகமான தமிழர்கள் வாழும் நகர் கோவையோ மதுரையோ அல்ல; பம்பாய்தான்! தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளில் இருந்தெல்லாம் பிழைப்புத் தேடி பம்பாய் சென்ற தமிழர்கள் உழைப்பை மட்டுமே மூலதனமாய் நம்பி வாழ்கிறார்கள். அவரவர் திறமை, அதிர்ஷ்டத்துக்கு ஏற்ப உயர்கிறார்கள். எடுத்துக் காட்டாகச் சிலரைச் சந்திப்போம்:**



* ஆர். ரவிசங்கர்

* எம். கே. மூர்த்தி: திருச்சியைச் சேர்ந்தவர். வேலை தேடி பம்பாய் வந்தவருக்கு ரூ. 180/– சம்பளத்தில் உடனே வேலை கிடைத்தது. வேலையில் சேர்ந்த நாள் முதல் படிப்படியாக முன்னேறி ஸ்வான் பைண்டர்ஸ் அண்ட் ஆஃப்செட் பிரிண்டர்ஸ் என்று தன் சகோதரர் ராஜன், நண்பர் எம். ராஜப் பிள்ளை ஆகியோருடன் கூட்டுச் சேர்ந்து ஆரம்பித்தார். அயராத உழைப்பின் விளைவாக இதற்குத் துணையாக கீதா ஆஃப்செட் டைபோகிராபி, மீரா ஆர்ட்ஸ் என்ற நிறுவனங்களையும் தனியாகத் தொடங்கியிருக்கிறார். தமிழ்நாட்டைச் சேர்ந்த நிறையப் பேர் இவற்றில் வேலை செய்கிறார்கள். புட்டபர்த்தி சாயிபாபா டிரஸ்ட் சம்பந்தமான அனைத்து அச்சுப் பொறுப்புகளும் இவர்களிடம்தான் தரப்பட்டிருக்கிறது. பம்பாயில் வரும் லாபத்தை வைத்துச் சென்னையில் 'வி பிராசஸ்' என ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் 'பம்பாயைப் போல் லாபத்தைத் தராமல் நஷ்டத்தில்தான் நடந்து கொண்டிருக்கிறது' என்று வருத்தத்தோடு சொல்கிறார் மூர்த்தி.



* மணி

* கே. துரைராஜ் — சயானில் உள்ள 'கனி ஸ்டோர்ஸ்' பல சரக்குக் கடையின் பங்குதாரர். முதலில் பல சரக்குக் கடையில் வேலைக்குச் சேர்ந்து அதன் தொழில் நுட்பங்களை நன்கு அறிந்து இன்று சொந்தமாகவே ஆரம்பித்து உயர்ந்து நிற்கிறார். தமிழர்களின்றி எல்லாத் தரப்பு வாடிக்கையாளர்களும் இவருக்கு இருக்கிறார்கள். ஒவ்வொரு வாடிக்கையாளரின் வீட்டுக்கும் நேரில் சென்று என்னென்ன பொருட்கள் தேவையென்று விசாரித்து, தங்களிடம் அந்தப் பொருட்கள் இல்லையென்றாலும் பிற இடங்களிலிருந்து தரு





எஸ். மணி

வித்து, மறுநாளே நேரிடையாகச் சென்று சப்ளை செய்வது இவர்களுடைய 'ஸ்பெஷாலிட்டி.' நல்ல வாடிக்கையாளர்களுக்கு ஒரு மாதக் கடன்வசதியும்தருகிறார்கள். இவரிடம் வேலை செய்த பல பேர் பம்பாயில் பல இடங்களில் சொந்தமாகக் கடை வைத்திருக்கிறார்களாம்.

* வி. ராமையா



* ஜி. வேங்கட ராம சாஸ்திரி

# ...கிறார்கள்; ...தார்கள்!



தர்கள் பம்பாயில் இருக்கிறார்கள். இவருடைய மகன் பி. ஏ. பட்டப் படிப்பு படித்திருக்கிறார். என்றாலும் இதே தொழிலுக்குத் தயாராகியுள்ளார். ''இங்கே என்னுடைய வாழ்க்கை திருப்தியாக இருக்கிறது. மதச் சடங்குகளைத்தமிழ்நாட்டைவிட இங்கே பலர் சின்சியராகச் செய்கிறார்கள்'' என்று சொல்கிறார் சாஸ்திரி.

* எஸ். எஸ். மணி—மாதுங்காவில் உள்ள 'கிங் ஸ்டார் ஹேர் டிரஸ்ஸர்ஸ்' எனும் ஏ/சி சலூனில் வேலை செய்பவர். பதினாறு வயதிலேயே

...மூர்த்தி



* ஆர். ரவி சங்கர்—சயானில் உள்ள 'முருகன் ஸ்டோர்ஸ்' எனும் எவர்சில்வர் பாத்திரக் கடையின் பங்குதாரர். ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையே நடத்துகிறார். சுமார் நாற்பது வருடங்களாக இத்தொழிலில் சிறப்புடன் விளங்குவதற்கு இவர்களுடைய நாணயம்தான் காரணம். பம்பாயிலேயே ஏழு இடங்களில் இவர்களுடைய கிளைகள் இருக்கின்றன.

* ஜி. வெங்கட்ராமசாஸ்திரி—சுவாமிமலையைச் சேர்ந்த இவரை ரயில்வேயில் பணியாற்றும் ஒருவர்தான் பம்பாய்க்கு அழைத்து வந்தாராம். அது முதல் இவர் பம்பாய் வாசியாகி விட்டார். திருமணம், பூஜை, காரியம் போன்ற வைபவங்களுக்குத் தவறாமல் ஆஜராகும்பிஸியானபுரோகிதர். இவரைப் போல் சுமார் 110 புரோகி

* சே. துரைராஜ்





## சினிமாவுக்குள் விளம்பரம்!

'In-film' விளம்பரம் அதாவது சினிமாவுக்குள் விளம்பரம் என்பது இப்போது பம்பாய் விளம்பர உலகில் ஒரு புதுமை. இதைச் செய்பவர்கள் கிரியேடிவ் யூனிட் என்கிற ஒரே ஒருவிளம்பர ஏஜென்ஸிதான். இதன் டைரக்டர் ஒரு பம்பாய்த் தமிழர் — விசுவநாத் ஐயர்:

''சினிமா காட்சிகளுக்கு நடுநடுவே மிக இயல்பாகச் சில விளம்பரங்களை நுழைத்து விடுவோம். காட்சியோடு காட்சியாக விளம்பரம் என்று தெரியாத வகையில் அமைக்கப்படும். ஆனால் பார்வையாளர்கள் உள் மனத்தில் நன்றாகப் பதியும் வண்ணம் இருக்கும். இப்படிப்பட்ட விளம்பரத்தினால் தயாரிப்பாளர்களுக்கு ஒரு கணிசமான தொகை கிடைக்கிறது.''

பேட்டி: செம்பூர் சந்துரு

## கேட்வே ஆஃப் பாம்பே

சுற்றுலாப் பயணிகளுக்கு Gate way of India போல தமிழ்நாட்டிலிருந்து வருகிற வி. ஐ. பி. க்களுக்கு கேட்வே ஆஃப் பாம்பேயாக இருப்பது பம்பாய் திருக்குறள் பேரவை! தமிழ்நாட்டிலிருந்து வருகிற அனேகம் பிரமுகர்கள் இங்கே பேசாமல் போனது இல்லை.

ஞாயிறு தோறும் இங்கே தவறாமல் கூட்டம் நடக்கும். குறைந்தது சுமார் முப்பது பேராவது கூடிச் சொற்பொழிவு கேட்பதுடன் சொற்பயிற்சியும் பெறுகின்றனர். விரைவில் 250 வது கூட்டத்தை விமரிசையாக நடத்த இருக்கிறார்கள் இப்பேரவையினர். இதன் அமைப்பாளராக இருக்கும் இரா. மு. சண்முகராசன் இதனை ஒரு வேள்வியாகக் கருதி வெகு சிறப்புடன் நடத்தி வருகிறார்.

— கல்லை அன்சாரி



பம்பாய்க்கு வந்தவர் இன்று இந்தக் கடையின் முழுப் பொறுப்பையும் ஏற்று நடத்துகிறார். குஜராத்தியினர், மராத்தியினர் தமிழர் என்று யாராயினும் இவரிடம் ஒரு வாரத்திற்கு முன்பே நேரம் குறித்துக் கொண்டு அதாவது 'அப்பாய்ண்ட்மெண்ட்' செய்து கொண்டுதான் முடி வெட்டிக் கொள்ள வருகின்றனர். எப்போதும் பிஸியாக இருக்கும் இவர் கடையில் வெற்றுப் பேச்சுப் பேசுவதற்கென்று யாரும் வருவது கிடையாது. குஜராத்தி திருமண வைபவத்திற்கு மணமகனுக்கு அழகு சிங்காரம் செய்யச் சிலசமயங்களில் இவரை அழைத்துச் சென்று விடுகிறார்கள். ''அதற்கு ஸ்பெஷல் கட்டணம்தான்'' என்று சிரித்துக் கொண்டே சொல்கிறார் மணி.

* வி. ராமையா — பிழைப்புத் தேடி பம்பாய் வந்தவர், முதலில் ஹோட்டலில் வேலைக்குச் சேர்ந்தார். வேலையிலிருந்து கொண்டே 'டிரைவிங்' கற்றுக் கொண்டு டாக்ஸி டிரைவரானார். தாராவியில் குடியிருக்கும் இவர் தமது வண்டியில் பயணம் செய்யும் யாரிடமும் எக்காரணத்தைக் கொண்டும் சண்டை போடுவதில்லையாம். ''உண்மையிலேயே நான் வசதியாக இருக்கிறேன். பரபரப்பான பம்பாய் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. பயணிகள் அனைவரும் என்னிடம் அன்புடன் நடந்து கொள்கிறார்கள். சென்னையைப் போல் தகராறுக்கு இங்கு இடம் இல்லை'' என்று சொல்கிறார் ராமையா.

* மணி — பம்பாய்க்கு வந்து சேரும்போதே என்ன வேலை கிடைத்தாலும் செய்தே தீருவதென்ற முடிவோடு வந்தாராம். அதன்படியே இன்று எல்லா வேலைகளையும் மாற்றி மாற்றிச் செய்து கொண்டிருக்கிறார். சில சமயங்களில் கைவண்டி இழுப்பார். மூட்டை தூக்கிப் போடுவது, வீடுகளில் பேப்பர் போடுவது என எந்தக் காரியத்தையும் திருப்தியுடன் செய்கிறார். திருமண விருந்துகளில் சமையல் செய்வதற்கும் சில சமயங்களில் போய் விடுகிறார். கடைசியாக ஓரிடத்தில் வேலை செய்துவிட்டு வந்தபோது நூற்றைம்பது ரூபாய் கிடைத்தது. அதை மூலதனமாக வைத்துச் சோளமும் ஒரு அடுப்பும் வாங்கி நடைபாதையில் கடை வைத்துவிட்டார்.

இவர்களிடமெல்லாம் பேசிக் கொண்டிருக்கும் போது தமிழ்நாட்டின் பேரில் நேசம் இருந்தாலும் அதிருப்தியும் இருப்பது புரிகிறது. 'தமிழ்நாடு வேலை வாய்ப்பை உருவாக்கத் தவறிவிட்டது. திறமை உள்ளவர்களைக் கல்விக் கூடங்களிலும் தொழிற் கூடங்களிலும் பயன்படுத்தத் தவறிவிட்டது. தொலைநோக்குப் பார்வையில் முன்னேற்றத்திற்கான எந்தத் திட்டமும் இல்லை. தமிழ்நாட்டின் திறமை வேறு எந்த மாநிலங்களுக்கோ பயன்பட்டுக் கொண்டிருக்கிறது. அந்தத் திறமையெல்லாம் ஒருமித்து தமிழ்நாட்டுக்கே பயன்படுமானால் தமிழகம் இந்திய அரங்கில் முதன்மை இடத்தைப் பெறும்' என்றெல்லாம் எண்ணுகிறார்கள்.




சருக்கம் — 18

## கடலெறி சாதை

தீப்பந்தங்கள் அலைமோதுகின்றன.

குறி வைக்கிறானே யொழிய வீசி எறிய வாய்ப்பில்லை. ஜோதியின் நடம் அவனை மீண்டும் மீண்டும் சொக்க வைக்கிறது.

வரதர் என்கிற சொல்லுக்கு ஏதோ வியாக்கியானம் கூறப் போகிறாளோ...?

-கேட்போமே...

வரதர் என்ற பெயருள் ஈசன் இருக்கிறான்; திருமால் திகழ்கிறார்; உபகாரியாகவும் வரம் அருளத் தக்கவனுமாக இருப்பவர்கள் இவர்கள் இருவர்கள்தாம் என்கிற விளக்கத்தை எவ்வளவு அழகாகப் பாடி விட்டார் சேக்கிழார்!

காலையில் நடந்த கசப்பு தேவைதானா என்று வலிந்து, பிடித்து, தெளித்த சொல்லோ?

இல்லை, உவந்து, உணர்ந்து, உறுத்திய சொல்லோ?

அந்தப் பொற்றாளை அவள் தொழுகிற போது...

கோவிந்தராசப் பெருமானின் சந்நிதியை ஏன் மூடச் சொன்னாய் மூடமதியே என்று தன்னையே கேட்டு, மூடிக் கிடந்த கதவங்களின் தாள் பணிகிறான்.

திரை மூடுகிறது.

எங்கும் பலத்த கரவொலிகள்.

குழல் மட்டுமே குரல் காட்டி இனிக்கக் குழைகிறது.

அடுத்து என்ன என்கிற கேள்விக் குறி...

திரை விலகுகிறது...

ஜோதி, தழுவத் துடிக்கும் பருவத்துப் பொன் சிட்டாய் உடையணிந்து பொலிகிறாள்! காதல் உருவத்து நாயகியாய்க் கயல் விழியைக் காட்டுகிறாள்!

பேரம்பலப் பொன்னே போல் பேரழகு காட்டி நின்ற இவள், யார் அம்பலத்துக்கு உரியவளோ?

கார் அம்பலத்தைக் கரங்களால் விலக்கிக் கொண்டு ஊரம்பலத்துக்கு உரியவள் நான் என்று உதயமாகும் முழு நிலவே போலப் பிரகாசிக்கிறாளே!

அது, காதல் கொள் நாயகியின் கனிந்த தோற்றம்.

காதலிக்கிறாளாம் ஜோதி.

அபிநயிக்கிறாள்; வல்லரசி இலைமறை, காய்மறைச் சொற்களால் ராகமிழுத்துப் பாடுகிறாள்.

யாரைக் காதலிக்கிறாள்?

எவருக்குமே புலனாகாத மெய்ப்பாடுகள்—பாவனைகள்...

இறுதியில்...

இந்தக் கேள்வியை அவளுக்கு அவளே கேட்டுக் கொண்ட ஆனந்தத் தாண்டவம்!

எல்லா வாத்தியங்களும் ஒருங்கிணைந்து 'யாரை? யாரை?' என்று கேட்பன போல முழங்குகின்றன.

சிருங்கார ரசமே சிருங்காரத்துள் நுழைகிற மாதிரி ஜீவனைத் தொட்டு ஆடுகிறாள்; சிந்தை குளிர ஆடுகிறாள்.

குறுவாளை ஏந்தியவன் சமயம் பார்க்கிறான். அவன் ஜோதியைத்தான் குறி வைக்கிறான். சிருங்காரம் மயக்குகிறது...

சேக்கிழார்க்கு அடியேன்...

குலோத்துங்கன் குழப்பமுடன் பிரமிக்கிற போது...

சேக்கிழார் தம்மை மறந்து பொருளை ஆராய்கிற போது...

'குலோத்துங்க அநபாயருக்கும் அடியேன்' என்று பாடியபோது...

குழப்பம் மேலும் குழம்பியது. இப்போது கூட்டமே குழப்பம் காண்கிற மாதிரி அந்தக் கொலைபாதகன் குறுவாள் எறிய, அது ஜோதியின் வேல்விழி வீச்சால் பட்டுத் தெறித்துக் குறி தவறச் செய்து, சேக்கிழாரைப் பதம் பார்த்து விட்டது.

கழுத்தின் பக்கவாட்டில் குறுவாள், குறி தவறிப் பாய்ந்து விட்டது. ரத்தம் பீறிட்டுக் குபுகுபுக்கிறது.

அவர் 'அநபாயா' என்று அலறத்தான் வாயெடுத்தார். ஆனால் அலறியது...

"ஜோதி!"



அந்நியன்
கொள்ளையடித்தான்
ஓட்டினோம்.
இப்போது —
'நம்மவன்'
கொள்ளையடிக்கிறான்
ஓட்டளிக்கிறோம்."

— ஆர். வசந்தகுமார்.

நாட்டியம் நின்றது.

மக்கள் கலவரத்தையடக்கச் சோழ வீரர்கள் திசைக்குத் திசை பாய்கிறார்கள்.

குறுவாளை எறிந்தவன், தப்பி மறைய முயன்ற போது, வசமாகப் பிடிபட்டுவிட்டான்.

சேக்கிழாரை உடனடியாக மருத்துவர் இல்லத்துக்குத் தூக்கிச் செல்கிறார்கள்.

குறிதவறி அதனால் வீச்சு வேகம் பலமிழந்து போனதால், குறுவாள் கழுத்தின் கால் பாகம் அளவே பாய்ந்திருந்தது. அதனை மெல்ல நீக்கி, துணிப் பொதியால் ரத்தப் பெருக்கைத் தடுக்கின்றனர்.

மயங்கிக் கிடந்த சேக்கிழாரைக் கண்டு மன்னனே விசும்பிவிட்டான் என்றால், ஜோதி எங்கே?

அவள் கோவென்று கதறுகிறாள். முகம் வீங்கக் கண்ணீர் மல்கிக் கதறுகிறாள்.

அவளைக் குலோத்துங்க சோழன் எவ்வளவோ தேற்றுகிறான்.

ஏனையவரைக் காட்டிலும் இந்த ஜோதி ஏன் சேக்கிழாரிடம் இவ்வளவு ஈடுபட்டிருக்கிறாள் என்பது புரியாமல், அருகிலிருந்த தேவியரும் அரசியல் முக்கிய அதிகாரிகளும் சந்தேகக் கண் கொண்டு நோக்குவதை அநபாயன் அலசிய கண்களுடன் நோக்குகிறான்!

"ஜோதி! உனது தெய்வமனைய சேக்கிழாருக்குத் தில்லை நடராஜன் ஒரு குறைவும் வைக்க மாட்டான்; கலங்காதே!" என்கிற சொல்லின் மூலம் கூட ஏனையவர்களுடைய ஐயத்தை வேரோடு களைந்து விட முடியவில்லையே!

"நீ இப்படி அழுவது சரியில்லை. நீ சேக்கிழாரைக் குருவாகப் பாவிப்பது உண்மையானால், அவருக்காகப் பிரார்த்தனை செய்; அழுவது அபசகுனம்."

கொஞ்சம் அழுத்தமான வார்த்தைகள்.

'தெய்வம்' என்று முன்னம் குறிப்பிட்டதை விட, 'குரு' என்ற சொல் காத்து நின்றது. அத்துடன் 'அபசகுனம்' என்ற சொல்லும் ஜோதியை மெல்ல மெல்ல விழிக்கச் செய்து அமைதிப்படுத்தியது.

மருத்துவர்கள் தீவிரமான முறையில் சிகிச்சையளித்துக் கொண்டிருந்தனர்.

எவன் குத்துவாளை எறிந்தவன்? ஏன் எறிந்தான்?

அநபாய குலோத்துங்கன் நினைவெல்லாம் பிடிபட்டவனை விசாரிப்பதிலேயே இருந்தது.

இரவு முழுவதும் யார் தூங்கினார்களோ இல்லையோ, ஜோதி, துப்புரவாகக் கண்கள் மீது இமை போடவில்லை.

**பொ**ன் வேய்ந்த பேரம்பலம், இரண்டாம் நாள் கதிரவன் கண்பட்டு, ஒளிக் கரம் பட்டுப் பிரகாசிக்கிறது.

இரவு நடந்த விசாரணையின் மீது எல்லாமே வெளிப்பட்டுவிட்டது. இவ்வளவுக்கு வைணவர்கள் இழிந்து விட்டார்களா?

சேக்கிழார் மூலம் சைவப் புராணம் உதயமாவது பொறுக்கவில்லை? ஜோதி மாண்டு விட்டால் சேக்கிழார் திருத்தொண்டர்



புராணம்பாடுவதையேநிறுத்திக்கொள்வார் என்கிற குயுக்தி எவ்வளவு மோசமானது? சேக்கிழாரையே கொன்றால், மன்னனின் கோபத்துக்கு ஆளாக நேரிடும் என்பதால் — மங்கையை மரணப்படுத்தச் சூழ்ச்சியா?

அவர்கள் போட்ட திட்டத்தை, எந்தை ஈசன் இப்படியாக்கிவிட்டான்...

சேக்கிழாரையே ஆபத்தில் சிக்க வைத்துவிட்டான்...!

சினத்துடன் ஆணையிடுகிறான் குலோத்துங்கன்: "திருமால் கோயிலைத் திறந்து, கோவிந்தராசப் பெருமான் மூர்த்தத்தை எடுத்துக் கடலில் எறியுங்கள். இங்கு கோவிந்தன் கதவுக்குள்ளிருப்பதைவிட கடலுக்குள் ஓய்வு கொள்ளட்டும்.* நடராசப் பெருமான் சந்நிதியையே இந்தத் திருமால் கோயில் அடைத்துக் கொண்டிருக்கிறது. கோயிலை இடித்துத் தள்ளி, விரிவாக்கம் செய்யுங்கள்!"

பக்கத்தே இருந்த தேவிமார்களிருவருள் பட்டத்தரசியான தியாகவல்லி கேட்டாள்: "பிரபோ! முதலமைச்சருக்கு உடல் நலமானதும் அவரை ஒரு வார்த்தை கேட்டுக் கொண்டு இந்த ஆணையைப் பிறப்பிக்கலாமே!"

"வேண்டாம் என்றுதான் இப்படி அவசரமாக ஆணையைப் பிறப்பிப்பது. சேக்கிழார் நிச்சயம் ஒப்புக் கொள்ள மாட்டார். இந்தப் போராட்டம் கூடாது என்பதற்காகவே மானுடப் பயன் பாடலில் 'வரதர்' என்ற சொல்லை எவ்வளவு நயமாக வலிந்து போட்டிருக்கிறார் பார்த்தாயா?"

திருமால் கோயிலுள் கோவிந்தராசப் பெருமான்சிலையை அடியோடு பெயர்க்கிறார்கள். நான்கு எருதுகள் பூட்டிய வண்டியில்

---

*. தில்லைத் திருமன்றின் முன்றிற் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்பு தொலைத்தெடுத்து —
— ஒட்டக்கூத்தர்

பொன்னிற் குயிற்றிப் புறம்பிற் குறும்பனைத்து
முன்னர் கடலாழியில் மூழ்குவித்த — தெய்வ
— ஒட்டக்கூத்தர்

முன்றிற் கிடந்த கருங்கடல்போய்
முன்னைக் கடல்புகப் பின்னைத் தில்லை
மன்றிற் கிடம்கண்ட கொண்டன்மைந்தன்
— ஒட்டக்கூத்தர்

363 of 1907 (கல் வெட்டு)



# பம்பாயில் கல்யாணமா? பாலாஜி இருக்கிறார்!



இப்போது பம்பாயில் உள்ள தமிழர்கள் வீட்டுக் கல்யாணம், சுப நிகழ்ச்சி என்றால் 'பாலாஜி'க்கு ஒரு ஃபோன் அடித்துவிட்டு, குறிப்பிட்ட தேதியன்று கல்யாண மண்டபத்துக்குப் போய்ச் சேர்ந்து விடலாம்! உங்களுடைய பட்ஜெட் எவ்வளவு என்று தெரிந்து கொண்டு அதற்கேற்றபடி வாழை மரம், மாவிலை, பந்தல், அலங்கார விளக்குகள், வாகனம், முதற்கொண்டு விருந்து, வைதீகம் வரை அனைத்தையும் நாளுக்காக, சுத்தமாக ஏற்பாடு செய்து விடுகிறார்கள் பாலாஜி கேடரர்ஸ்.

நெல்லை மாவட்டத்தில் கொடகநல்லூரைச் சேர்ந்த ஆர். சபரிநாதன் வேலை தேடி பம்பாய் வந்தவர். அவருக்கு ஸ்டெனோ வேலை கிடைத்தது. கூடவே, செம்பூரில் உள்ள அகோபில மடத்தில் நடைபெற்ற திருமணங்களின் 'பந்தி' பொறுப்பை ஏற்றவர், பின்னர் ஜீயர் ஸ்வாமிகளின் அருளாசியுடன் 'பாலாஜி கேடரர்ஸை' ஆரம்பித்தார்.

தமிழர்கள் கல்யாணங்கள் நடத்துவதற்கென்றே 'அலமேலு மங்கை திருமண மண்டபத்தை' அமைத்திருக்கிறார் சபரிநாதன். காலப் போக்கில், வசதியில்லாத தமிழர்களுக்கு இந்த மண்டபத்தை இலவசமாகத் தரப் போகிறாராம்.

போட்டுக் கடல் நோக்கிக் கொண்டு செல்கிறார்கள்.

வைணவர்கள் நெருப்பாகக் கொதிக்கிறார்கள்.

ஒன்றைச் செய்யப் போய், அது மற்றொன்றாய் இம்மாதிரி முடிந்து விட்டதே!

கோவிந்தராசப் பெருமான் சிலையைக் கடலில் தூக்கி எறிகிற காட்சியைத் தூரத்தே இருந்து மறைந்து கவனிக்கிறார் வைணவச் செல்வர் இராமாநுசர். இதயம் நெருப்பாய் எரிகிறது.

தில்லைக் கோயிலில் திருமால் சந்நிதியை இடித்துத் தள்ளுகிறார்கள் என்கிற நெஞ்சுகன் வேல் பாய்ச்சும் செய்தி எட்டுகிறது. என்ன செய்ய முடியும்?

முதலில் *கோவிந்தராசப் பெருமான் சிலையைக் காக்க வேண்டும்.

சிலையை எறிந்துவிட்டுச் சோழ வீரர்கள் மறைந்ததும், உடனே வைணவத் திருமக்கள் கடலில் புகுந்து நீந்தி சிலையைத் தோளோடு தோள் கொடுத்துத் தூக்கி வருகிறார்கள்.

இராமாநுசர் கண்களில் மாலை மாலையாகக் கண்ணீர்.

சிலையை ரகசியமாக எப்படியாவது திருப்பதிக்குக் கொண்டு செல்ல உத்தரவு பிறப்பிக்கிறார்.

அவ்வண்ணமே உறுதியான கூண்டு வண்டியொன்றில் சிலை ஏற்றப்பட்டு, *திருப்பதி நாடிச் சென்றது.

இந்தச் செயலைக் கண்ட சோழ வீரர்கள், வேகமாகப் புரவியைத் தில்லை நோக்கி விரட்டுகிறார்கள்.

தில்லையிலோ......

கோவிந்தராசப் பெருமானுக்கு ஏற்பட்ட நிலை கண்டு ஜோதி வருந்தத்தான் செய்தாள்.

அப்போதுதான் இந்தச் செய்தியைக் கொண்டு வந்தனர் வீரர்கள்.

'என்ன! சிலையை ராமாநுஜர் வேங்கடம் நோக்கிக் கடத்திச் செல்கிறாரா? எவ்வளவு நெஞ்சழுத்தம்?'

அநபாயனின் கண்கள் அக்கினிக்குண்டங்களாவது கண்டு அரண்டு போயினர் அனைவரும்.

சேக்கிழார் மரணப்படுக்கையால் பாதி நிலாவாய் உருகிவிட்ட ஜோதி நிலா, இனி மீதி நிலாவாவது சோழனை மீட்கும் நிலவாக இருக்கட்டும் என்று எழுந்து வந்து அருகே அமர்ந்தாள்; அமைதியை உணர்த்தினாள்.

(தொடரும்)

---

* அம்பொற் குடைச் சகமாயிரத்
தொன்பதாம் வருஷத்துத் தென்பால்
சென்னி குலோத்துங்கன்
சித்திரக்கூடச் செங்கண்மால்
தன்னை அலையெறி நான்தான்...
— இராமாநுசர் திவ்ய சரிதம்

* கீழ்த் திருப்பதியில் இச்சிலையை இராமாநுசர் பிரதிஷ்டை செய்து, ஆண்டாள் ஆழ்வார்கள் சந்நிதிகள் அமைத்தார். அதற்கு இராமாநுசபுரம் என்ற திருப்பெயரையும் சூட்டினார்.
— இராமாநுசர் திவ்ய சரிதம்

# தேவேந்திரா சாரீஸ்

H.O. 27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை—600 003,
போன்: 33113

கிளை ஷோ—ரூம்:

கடை எண்: 7, ராம்ஸ் பஜார்,
(பனகல் பார்க் அருகில்)
தியாகராய நகர், சென்னை—600 017

போன்: 443367

### தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்

* காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38, W.E.A., அஜ்மலகான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி—5, போன்: 581050, 561786. * "திருநூலக்ஷ்மி" மாதர்கள் கூட்டுறவு அமைப்பு, C-79, விகாஸ்புரி, (போடெல்லா), புது டெல்லி—110 018. * திருமதி உமாசுப்ரமணியம், II-A-97-B, லஜ்பத் நகர் II, புது டெல்லி—110 024, போன்: 616552. * திருமதி விமலா ராகவன், 6/66, W.E.A., கரோல்பாக், புதுடெல்லி—110005, * பங்கஜம் சுந்தரராஜன், C6/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடெல்லி—67. * Mrs. சாரதா 16/449, விரம் பில்டிங், மாதுங்கா பம்பாய்—19. * சுசிலாமணி, 22, காந்தி மஹால், தேஜோ கோயா பார்க், வின்சென்ட் ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. * லக்ஷ்மி நாராயணன், 5, வாணி கோ—ஆபரேடிவ் ஹவுசிங் சொஸைட்டி, வல்லபாக் ரோடு, காட்கோபர், (கிழக்கு), பம்பாய்—77. * நல்லீஸ் சில்க் சாரீஸ், சென்டர், 401 டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. * சௌத் இந்தியன் கன்ஸர்ன், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. * லதா கிருஷ்ணன், பிளாட் நெ. 20, காமதேனு கோ. ஆப். பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்—89, (கிளாஸ் பாக்டரி அருகில்). * ஜெயஸ்ரீ, 2—A, தேசப் பிரியா பார்க் ரோடு, கல்கத்தா—26. * S. பொன்னப்பன், 8—3,—282, 2வது பஜார், செகந்திராபாத், போன்: 559562. * திருமதி T.S. சகுந்தலா சீனிவாசன், 18/1, A, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸவப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர். போன்: 224357, 96/1, கிழக்கு பார்க் ரோடு, (கணேஷ் கோவில் எதிரில்) மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து மல்லேஸ்வரம், பெங்களூர்—560 003. * திருமதி துர்காம்பாள், 22, சேஷபுரம், திருச்சி. * திரு S. சேதுராமன், 9, பாணு துரை சன்னதி தெரு, கும்பகோணம் 612001, போன்: 972. * ராணி சில்க், 13 மஹால் 4வது தெரு, மதுரை—1, போன்: 26295 * திருமதி S. லெட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம்—1, (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) * திருமதி லெட்சுமி சத்தியமூர்த்தி, 1044, திருச்சி ரோடு, ராமநாதபுரம், கோயம்புத்தூர்—641 045. * ஸ்ரீ முருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு, கிழக்கு R.S. புரம், கோவை—2 * மகாலட்சுமி சில்க் சென்டர் தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம் * ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711, நாணயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர். * பாகீரதிமூர்த்தி, 100, ஸ்ரீ வராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. * S. சுந்தரம், 9, சாத்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்—2. * திருமதி K. சீதாலட்சுமி, 41, 4வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை—28. போன்: 73244. * திருமதி சாவித்திரி பாலசுப்ரமணியம், 2; 7வது தெரு, நங்கநல்லூர், சென்னை—61, (பிள்ளையார் கோவில் அருகில்) போன்: 433737. * திருமதி சரோஜா கிருஷ்ணமூர்த்தி A9/386, புதிய குடியிருப்பு (முதல் மாடி) குடிசை மாற்றுவாரியம், திருமங்கலம், அண்ணா நகர் மேற்கு, சென்னை—600 107, (ஸ்ரீ சத்திய சாயிபாபா கோவில் அருகில்), * M/s. பாலாஜி கிளாத் சென்டர் 29, வெங்கடேச சௌத்ரி தெரு, மேற்கு தாம்பரம், சென்னை—45. * திருமதி கலோசன கோவிந்த், 2, M.I.T. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை—44.

# 95/100

எம்.ஏ.சுசீலா

சுவரோரமாக ஒடுங்கிச் சுருண்டு, ஒரு குழந்தையைப் போலப் படுத்திருந்தாள் அம்மா. காய்த்துப் போன அவள் கைவிரல்களையும், பாளம்கண்ட சதுப்புநிலமாய்ப் பிளந்திருந்த அவள் பாதங்களையும் வெறித்துப் பார்த்தபடி, அசையாமல் உட்கார்ந்திருந்தான் ஹரி. அவனுடைய நரம்புகள், கனுக்குக் கண்டாற்போல் முறுக்கிக் கொண்டன. ஒளி மங்கிக் கொண்டிருந்த சிம்னியின் திரியைத் தூண்டி விட்டபடி, அவசரமாய்த் தன் கண்களைக் கசக்கித் தூக்கத்தைப் போக்கிக் கொண்டான் அவன்.

நள்ளிரவு நேரங்களில், கண்விழித்துப் படிக்க விடாமல் தன்னைத் தொல்லை செய்யும் தூக்கத்தை விரட்டியடிக்க... டீ, காப்பி இவற்றின் துணையை ஹரி, ஒரு போதும் நாடியதில்லை.

அம்மா...! அவளே அவனது ஆவேசத் தூண்டுதல்! ஆற்றல் குறைந்து, தளர்ச்சி மேலிடுகிற பலவீனமான தருணங்களிலேயும் கூடச் சருகாய் உலர்ந்து போய் விட்ட அவன் தாயே ஆக்க சக்தியை அவனிடத்தில் மீட்டுத் தந்திருக்கிறாள்.

பொழுது விடிந்தால், முடித்துக் கட்டிய பின் குடுமியோடு, தர்ப்பைக்கட்டைக் கையில் எடுத்துக் கொண்டு, வீடு வீடாக விரைகிற ஏழைப்புரோகிதருக்கு வாழ்க்கைப் பட்ட நாள் முதலாக... வறுமையை மட்டுமே வாழ்க்கையாகச் சந்தித்துப் பழகியிருக்கிற அம்மா! வாய்க்கும், கைக்கும் நிகழ்ந்த பற்றாக் குறைப் போராட்டத்தை, அரைகுறையாகவே முடித்து வைத்துவிட்டு, அப்பா, அகால மரணமடைந்து விட்ட பிறகு, வக்கீல் வீட்டுச் சமையலும், ஒரே பையனின் எதிர்காலமும் மட்டுமே வாழ்க்கை என்று தன் வட்டத்தைக் குறுக்கிக் கொண்டு, முடங்கிப் போய்விட்ட அம்மா!

'அம்மா... உன் கைக்கு ஓய்வையும், வாய்க்கு ருசியையும், வாழ்க்கைக்கு ஓர் அர்த்தத்தையும் உண்டாக்குகிற வரை...: எனக்கு ஓய்வில்லை!' — கல்வியில், வெறியும் வேகமும் கொள்ள வைத்து, ஹரியின் உள்ளத்தில் உத்வேகக் கனலை மூட்டுகிற இந்தச் சொற்கள், அவன், நாளும் ஓதுகிற வேதமாகிப் போனபின்... பிற புற ஈர்ப்புகள், அவனில் ஒலி அடங்கி, நிறமிழந்து மடிந்து போயின.

வக்கீல், அவன் தாயிடம் முன்கூட்டியே உறுதி அளித்திருந்தார்.

'இதோ பாரு கனகம்! ஹரி மட்டும் ப்ளஸ் டூ முடிச்சிடட்டும். அப்புறம் எனக்குத் தெரிஞ்ச ஏதாவதுஒரு கம்பெனியிலே அவனை நுழைச்சு விட்டுடறேன். நீ, கவலை இல்லா



மல் இருக்கலாம்.''

ஆனால்... ஹரியின் கவலை வேறாக இருந்தது என்பதோடு, அவன் இலட்சியமும் ப்ளஸ் டூ நிலைக்குள் அடங்க மறுத்தது. தன் தாயைக் கொலு அமர்த்திப் பார்க்க அவன் விரும்பிய கோட்டைக்கு, அது... ஒரு நுழை வாயில் மட்டுமே. தன் வேண்டுகோளை, வக்கீலிடம் அவன் ஒரு மன்றாட்டாகவே விடுத்த போது அவர், ஒருகணம் அசந்துதான் போனார்.

''மாமா! 'ப்ரொஃபஷனல் கோர்ச'க்குப் போகணுங்கிற பேராசையெல்லாம் எனக்கில்லே. ஆனா... நான் குறைஞ்ச பட்சம் ஒரு பட்டதாரியாகவாவது ஆகணும். அதுக்கேத்த ஒரு வேலையிலே உட்கார்ந்து, ஏழைமையோட சாயல் கூடப் படியாம எங்கம்மாவை அடை காக்கணும். அதுக்குத்தான் இப்படித் துடிக்கிறேன் மாமா!

''ஹரி! நீ காலேஜ்லே படிக்கிறதுக்கு, ஏதாவது ஒரு 'சாரிட்டீஸ்' மூலமா ஸ்காலர்ஷிப் வாங்கித்தர்றதுகூட எனக்குக் கஷ்டமில்லே...! ஆனால் பூணூல் போட்டவனுக்கெல்லாம் காலேஜ் சீட் கிடைக்கிறது இப்பக் குதிரைக் கொம்பா இருக்கேப்பா, நீ நிறைய மார்க் வாங்கு! அப்புறம் பார்ப்போம்...! இப்பவே சொல்லிட்டேன்! உனக்கு மார்க் இல்லேன்னா, நான் எவன்கிட்டேயும் சிபாரிசுக்குப் போக முடியாது.''

— கண்டிப்புக் கலந்த குரலில், வக்கீல் சொல்லி முடித்தார்.

ஹரிக்குத் தாயன்பு இருந்தது; கூடவே, தன்னம்பிக்கையும் நிறைய இருந்தது. அவன் இரவுகள், பகல்களாயின.

''சார்! இன்னிக்கு எத்தனை பேப்பர் அடிச்சீங்க?''

''என்ன சார் நீங்க? என்னவோ எல்லாப் பசங்களுமே தப்புத் தப்பா விடை எழுதி அடிக்க வச்சிருக்காப்பலே கேட்கறீங்க?''

''அட... நீங்க ஒண்ணு! அவர் மொழியிலே அடிக்கிறதுன்னா... 'டிக்' அடிக்கிறதுன்னு அர்த்தம்.''

''அதுக்குத்தான் நம்பளையெல்லாம் 'டிக்காகா'ன்னு வருணிச்சுப் பத்திரிகையிலே கூட நம்ம காலை வாரி விட்டிருந்தாங்களே.''

''அவங்களுக்கு வேறே வேலை என்ன? நம்ம கஷ்டமெல்லாம் அவங்களுக்குத் தெரியுதா என்ன? ஊர் விட்டு ஊர் வந்து பேப்பர் திருத்தறோம். எத்தனைக்கெத்தனை கூடுதலாய்த் திருத்தறோமோ... அவ்வளவுக்கு லாபம்தானே?''

''இந்த அநியாயத்தைக் கேளுங்க சார்! பக்கத்து ஹாலிலே திருத்தறவங்களுக்கெல்லாம் காலையிலே முப்பது தாள், மத்தியானம் முப்பது தாள்னு கொடுக்கிறாங்களாம். நம்ப ஹாலிலே என்னடான்னா இருபது பேப்பரைத் தாண்டவிட மாட்டேங்கிறாங்க... இந்த அக்கிரமத்தைச் சும்மா விடக் கூடாது சார்!''

ப்ளஸ் டூ கணித விடைத்தாள்களைத் திருத்தும் பணிக்கு, அந்த ஆண்டுதான் முதல்



பம்பாய் மாரியம்மன்

கோலிவாடாவில் உள்ள முத்துமாரியம்மன் கோவில் இங்குள்ள தமிழர்களிடையே பிரசித்தமானது. ஆண்டுக்கொருமுறை நடக்கும் மாசி மக விழாவில் பக்தர்கள் காவடி எடுப்பதும், அலகு குத்திக் கொண்டு பாரங்களை இழுத்துச் செல்வதும், வேல், கத்தி என ஆயுதங்களை உடம்பில் செருகிக் கொண்டு பக்தியுடன் செல்வதும் பம்பாய்வாசிகளுக்கு பிரமிப்பு தரும் விஷயங்கள்.

### வித்தியாசமான கௌரிசங்கர்

தந்தையின் வாக்கை சிரமேற் கொண்டு தமிழ்நாட்டில் வேதமும், நாட்டிய சாஸ்திரமும் கற்று 1984 இல் பம்பாய் வந்தடைந்தார் இளைஞர் கௌரிசங்கர். பல நடனப் பள்ளிகளில் 'நாட்டிய சாஸ்திர' வகுப்புகள் நடத்துகிறார். அதோடு, பம்பாய்த் தமிழர்களுக்கு வேதமும் சொல்லிக் கொடுக்கிறார். தமிழ்நாட்டிற்கே உரித்தான வேஷ்டியோடும், கட்டுக் குடுமியோடும் பம்பாயின் பல பாகங்களுக்கும் சென்று வரும் இந்த இளைஞர் வித்தியாசமானவர் தான்.

— செம்பூரான்

முறையாக வந்திருந்த நாகராஜன், தயங்கிய படி வாய் திறந்தார்.

''அத்தனை வேகமா எப்படி சார் திருத்த முடியும்? ஏதாச்சும் தப்பு இருந்து... கூட்டல் விட்டுப் போய் சீஃப் எக்ஸாமினர் கண்டு பிடிச்சிட்டார்னு... அப்புறம் கேவலமில்லே?''

''அட, நீ ஒண்ணுப்பா! சீஃப் எக்ஸாமின ருக்குக் கொடுக்கிற பேப்பர்களை முடிக்கிற துக்கே நேரத்தைக் காணோம்...! இதிலே நம்ம பேப்பர்களை, மெலெழுந்த வாரியாப் பார்த் தாப் பத்தாது? அதெல்லாம் ரொம்பக் கண் டுக்க மாட்டாங்கப்பா!''

காப்பி இடைவேளை என்ற பெயரில், அரை மணி நேரத்துக்கும் கூடுதலான அரட் டையை ஒருவழியாக முடித்துவிட்டுத் திருத் தும் ஹாலுக்குள் நுழைந்து, வேலையில் ஈடு பட்ட அவர்களின் கவனம், அடுத்த ஐந்து நிமிடங்களில் அங்கு எழுந்த சலசலப்பால் மறுபடியும் கலைந்தது.

ஆசிரியர் சங்கத்தைச் சார்ந்த பிரதிநிதி ஒருவர், 'சைக்கிளோஸ்டைல் செய்யப்பட்ட சுற்றறிக்கை ஒன்றை அங்கே திருத்துபவர் களிடம் விநியோகித்துக் கொண்டிருந்தார்.

'....தாள் திருத்துவதற்கான ஊதியம்... பிற மாநிலங்களை விட இங்கே மிகவும் குறைவு... ஆசிரியர்களுக்கு வழங்கப்படும் தினசரிப் படியும் போதுமானதல்ல... இவற்றை எதிர்த்து, அரசின் போக்குக்குக் கண்டனம் தெரிவிக்கும் வகையில், நாளை, தாள் திருத்தும் பணியைப் புறக்கணித்து ஆர்ப்பாட்டம் நடைபெறும்... அதற்கான ஆயத்தக் கூட்டம் இன்று பிற்பகல் மூன்று மணி அளவில்... என்று கண்டிருந்த அந்த அறிக்கை, அந்தக் கணத்திலேயே பலமான வாதப் பிரதிவாதங்களை உசுப்பிவிட, அத் தனை இரைச்சல்களையும் மீறித் தாள் திருத்தும்

# இந்தி டி.வியில் தமிழ் நாவல்



ஒரே சமயத்தில் மூன்று காமிராக்களைப் பயன்படுத்தி, சரிகாவைக் கதாநாயகியாகக் கொண்ட ஒரு முழுநீள இந்தி வீடியோ திரைப் படத்தை (ஏக் பூல்) ஐந்தே நாட்களுக்குள் தயாரித்து அதன் மூலம் நம் நாட்டிற்கு இரண்டு லட்சம் ரூபாய் அந்நியச் செலாவணி ஈட்டி சாதனை படைத்தவர் கள்... வேறு யாருமில்லை — அறிவரசன் (அரசு), ஜோனத்தான் (ஜோனு) என்ற பம்பாய்த் தமிழ் இரட்டையர்கள்.

தமிழ்நாடு திரைப்படக் கல்லூரியில் பயின்று, பம்பாய் 'தூர்தர்ஷனில்' சிறிது காலம் காமிராமேன்களாகப் பணியாற்றி விட்டு, வீடியோ துறையில் சாதனைகள் நிகழ்த்த வேண்டும் என்ற குறிக்கோளுடன் அங்கிருந்து வெளியேறினார்கள்.

வெளி நாடுகளில் பிரபலமாக உள்ளது போன்ற வீடியோ இசை நிகழ்ச்சிகளைத் தயாரிக்க வேண்டும் என்பது இவர்களின் திட்டம். இந்தப் படங்களில் வரும் புதுமை யான தந்திரக் காட்சிகளையும், Special Effect களையும் தர பல உயர் ரக உபகரணங்கள் தேவை. ஐம்பது லட்சம் ரூபாய் பெறுமான முன்னா ஒரு நடமாடும் ஸ்டுடியோவை அமைப் பதில் ஈடுபட்டுள்ளார்கள் இந்த இரட்டை யர்கள். விரைவிலேயே இவர்கள் தயாரிப் பில் ஒரு தமிழ் நாவல் டீ. வி. தேசிய நிகழ்ச்சி யில் தமிழிலும் இந்தியிலும் தொடராக வெளி வர இருக்கிறதாம்!

## விளையாட்டுத் துறையை விட்டு வைக்கவில்லை!

இந்தியாவின் மிகச் சிறந்த கூடைப் பந்தாட்ட வீரர்கள் ஒவ்வொரு ஆண்டும் பங்கேற்கும் 'ராமு நினைவு கூடைப் பந்தாட்டப் போட் டியை' பம்பாய் இந்தியன் ஜிம்கானா நடத்தி வருகிறது. 'ராமு' என்று அன்புடன் அழைக்கப் பட்ட எஸ். ராமசந்திரன் என்ற விளையாட்டு வீர இளைஞரின் நினைவாக இப்போட்டி நடை பெறுகிறது.

1948 இல் பம்பாய் வாழ் தமிழர்களால் வித்திடப்பட்டு இன்று ஆல் போல் தழைத்துள்ள இந்தியன் ஜிம்கானாவில் டேபிள் டென்னிஸ், டென்னிஸ், கிரிக்கெட், பாட்மிண்டன், கூடைப் பந்தாட்டம், கால் பந்தாட்டம், கராத்தே என்று பல விளையாட்டுக்களிலும் பயிற்சி அளிக்கப் படுகிறது. இங்கு பல விளையாட்டு வீரர்கள் உருவாகி அகில உலக அரங்குகள் வரை சென்று வந்துள்ளனர்.

விளையாட்டுத் துறை பற்றிய பல அரிய நூல் களைக் கொண்ட நூல் நிலையம் ஒன்றையும் இந்தியன் ஜிம்கானா நடத்தி வருகிறது.

— செம்பூரான்

# வாசகர் பட்டிமன்றம்-2

## பரிசு

## ரூ.300



**தமிழ் சினிமாவின் தரம் —**

* **உயர்ந்துதான் இருக்கிறது!**
* **உயரவே செய்யாது!**

உங்கள் கருத்து என்ன?

அனுபவ பூர்வமாக வாதாடி, கல்வியில் சுமார் அரைப்பக்கத்தில் அடங்குகிற மாதிரி கட்டுரை எழுதி அனுப்புங்கள்.

இரு தரப்பிலும் இரு கட்டுரைகள் பிரசுரமாகி ரூ. 100/— பரிசு பெறும்.

மற்றும் இரு கட்சியிலிருந்தும் ஐந்து ஐந்து கட்டுரைகளிலிருந்து முக்கியப் பகுதி மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாகும். அவற்றுக்குத் தலா ரூ. 10 பரிசு!

தவிர, இருதரப்பும் பெறும் மதிப்பெண்கள் வெளியிடப்படும்.

**முடிவு தேதி: ஆகஸ்டு 25**

நிபந்தனை: கீழே உங்கள் விலாசத்தை எழுதி இந்த அரைப்பக்கத்தை உங்கள் கட்டுரையுடன் இணைக்கவும்.

கோரிக்கை: உறையின் மீது 'வாசகர் பட்டி மன்றம் — 2' என்று குறிப்பிடவும்.

பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................

பணியில், தன்னை ஆழ்த்திக் கொள்ள, நாகராஜன் செய்த முயற்சிகள்... வியர்த்தமாயின.

''என்ன சார் நீங்க... இன்னும் திருத்திக்கிட்டு! மூணு மணிக்குக் கூட்டம்னு தெரியுமில்லே... கிளம்புங்க!''

''இதோ... கையிலே இருக்கிற இந்த ஒரு தாளை மட்டும் முடிச்சுட்டா... இந்தக் கட்டு பூர்த்தியாயிடும்...

''அட... சட்டுப்புட்டுட்டுன்னு அடிச்சுப் போட்டுட்டு வாங்க சார்! நீங்களோ புதுசா வேறே இருக்கீங்க. நம்ம சங்கத்தைப் பகைச்சுக்கிட்டா அப்புறம் கருங்காலிங்கிற பேரு தான் மிஞ்சும்... அவ்வளவுதான் நான் சொல்லுவேன்!''

சக ஆசிரியரின் எச்சரிக்கையும், இயல்பான அவசரமும் ஒன்று சேர... நாகராஜன், விடைத்தாளைப் பதற்றம் கலந்த வேகத்துடன் புரட்டியதில், பத்து மதிப்பெண் கணக்கொன்று, அவர் கண்ணில் படாமல் மூலையில் ஒளிந்து கொள்ள, துரதிர்ஷ்டக்கார ஹரியின் அந்த விடைத்தாள் இருநூற்றுக்கு நூற்றுத் தொண்ணூறு (190/200) என்று மகுடம் சூட்டிக் கொண்டது.

ஹரியிடம் வக்கீல், கோபமாக இரைந்து கொண்டிருந்தார்:

''இதுக்குத்தான் மார்க் வாங்குடான்னு தலைதலையா அடிச்சிண்டேன். கிராஜுவேட் ஆகணும்னு ஆசை மட்டும் இருந்துட்டாப் போறுமா? அம்மா கஷ்டப்படறாளேன்னு, பொறுப்பு வேண்டாம்? சிபாரிசு பண்ற துன்னு... அதுக்குக் கூட ஒரு தகுதி வேண்டாமா? அவனவன் 'ஃபார்வர்ட் கம்யூனிட்டி'யிலே கணக்கிலே இருநூறு மார்க் எடுத்துட்டுக் கியூவிலே நிக்கறான். நூத்தித் தொண்ணூத் தஞ்சு மார்க்குக்குக் குறைஞ்சாப் பேசாதீங்கன்னுட்டார் பிரின்சிபால்.''

''எனக்குக் கட்டாயமா 'சென்டம்' வரும்னு நம்பிக்கையா இருந்தேன் மாமா! இப்போகூட 'ரீவேல்யூ' பண்ணச் சொல்லி மனுக் கொடுக்கலாம்னு கணக்கு வாத்தியார் சொல்றார்.''

''வாயை மூடுடா ராஸ்கல்! உன் பேச்சை ஒரு தடவை நம்பினது போறும்... அந்தக் காசை வேறே தண்டம் அழறதுக்கு நான் தயாராயில்லே! இதோ பாரு... கோயம்புத்தூரிலே எனக்குத் தெரிஞ்ச ஒரு மில்லிலே உனக்கு வேலை பார்த்து வெச்சிருக்கேன்... நாளைக்கே போய்ச் சேரு! உங்க அம்மா கவலை உனக்கு வேண்டாம்! நாங்க இருக்கோம், அவளைப் பார்த்துக்க'' — பதினைந்து வருஷம் வீட்டோடு பழகிவிட்ட சமையல்காரியை இழக்க விரும்பாத அந்த வக்கீல், தீர்ப்புச் சொல்லி முடித்தார்.

வினாத் தாளில் தான் குறித்துக் கொண்டு வந்த அத்தனை விடைகளும் சரியானவை என்று கணக்கு வாத்தியார் சத்தியம் செய்து சொன்ன பிறகும், பத்து மதிப்பெண்களைத் தான் கோட்டை விட்ட தன் மர்மம் புலப்படாமலே... யுகப் புரட்சிக்கான ஆவேசம் அடங்கிப் போன உயிர்ப்பற்ற நடைப் பிணமாய்... கோயம்புத்தூரை நோக்கிய தன் பயணத்தைத் தொடங்கினான் ஹரி.



# விருப்பாக நீ

தெரியாத்தனமாய், சாக்லேட்டுக்குப் பதிலாக ஏழெட்டு அஜீரண மாத்திரைகளைத் தின்றுவிட்டாற் போல.....

புடலங்காய் என நினைத்து, பாம்பை உருவினாற் போல....,

ரோஜா இதழ்கள் என்றெண்ணி, அரளி இதழ்களை அள்ளி வாயில் போட்டு மென்றாற் போல....

இன்னும் எத்தனை உதாரணங்களை வேண்டுமானாலும் சொல்லலாம், லோகநாதன் அப்போதிருந்த நிலைமைக்கு...

இன்பாவிடம் அவருக்குப் பயமில்லை. ஆனால் அவளுள் இருக்கும் தன் மூத்த மனைவியிடம்தான் அவரது பயம் முழுக்க....

தன் மகனும், இன்பாவும் நடத்தப் போகும் இனிமையான இல்லறத்தை, தன் ஆயுசுக்குள் பார்த்துவிட்டுக் கண் மூடலாம் என்று பார்த்தால், மங்களாம்பாள் விடமாட்டாள் போலிருக்கிறதே....

பெண்டாட்டிக்குப் பயப்படவில்லை; பெண்டாட்டியின் ஆவிக்குப் பயப்பட வேண்டியிருக்கிறதே.

அவர் மாதையனிடம் எச்சரிக்கிறார்.

''இந்தா, அங்கே போய்ப் பேசிட்டு நிக்காதே.... முதல்லே, இந்தப் பொண்ணை, ஊரை விட்டு விரட்டப் பார்க்கணும். இது பத்தி நந்துகிட்ட.....''

தான் யாரிடம் பேசிக் கொண்டிருக்கிறோம், என்கிற நினைப்பே இல்லாமல், பேசிக் கொண்டே போனவர், திடுக்கிட்டு நிறுத்துகிறார்.

வேலைக்காரர்களை தனக்குச் சமமாய்ப் பாவித்து, இதுவரையில் எதையுமே சொன்னதில்லை அவர்.

'இன்று எனக்கு என்ன வந்துவிட்டது.....

அவர், தன் நெஞ்சை ஒரு கையால் அழுத்திப் பிடித்துக் கொள்கிறார்.

அவரது நிலையைக் கண்ட மாதையன், பதறிப் போகிறான்.

''என்ன பண்ணுதுங்க, எசமான்.''

''ஒரு எழவுமில்லே. நீ போய், உன் வேலையைக் கவனி, போ...''

அவர், தனது இருப்பிடமான கல்யாணக் கூடத்துக்கு வந்து, சாய்வு நாற்காலியில் சாய்கிறார்.

உள்ளச் சோர்வில், இமைகள் தாமாக மூடிக் கொள்கின்றன.

மூடிய இமைக்குள் மங்களாம்பாள் வந்து நிற்கிறாள்.....

''ஏங்க.... நான் போட்டுட்டிருக்கிற நகை அத்தனையும் இன்னிக்கெல்லாம் இருந்தா, ஒரு கோடி ரூபாய் பெறுமா? இருபது வருஷங்களுக்கு முந்தி.. அறுபது லட்சம்னு சொன்னீங்க.... அதுக்காக, அதுக்காக.... என்னே வாழ விடாமலேயே செஞ்சுட்டீங்களே இது நியாயமா?

''நான் உங்களுக்கு என்ன துரோகம் செஞ்சேன். என் கண்ணெதிரேயே, அந்த நாடகக்காரியை அழைச்சிட்டு வந்து வச்சுட்டீங்க. நான் தடுத்தேனு.... அவளுக்குப் பொறந்த குழந்தைங்களேயே என் குழந்தைங்களா நான் நினைக்கலியா....

''இத்தனே பெரிய வீட்டுல எனக்கு இடமில்லாமலாப் போயிடுச்சு. இந்த வீடு கூட, எனக்கு எங்க அப்பா கொடுத்த சீதனம் தாங்க....

''நான் சாதுதான்.... உங்களேத் தவிர, வேறே ஒரு உலகம் இருக்கிறதே எனக்குத் தெரியாதுதான். ஆனு இப்ப.....? என்னுடைய உலகத்துக்கு உங்களேயும் அழைச்சிட்டுப் போகலாம்னு வந்திருக்கேன். எப்ப புறப்படறதா உத்தேசம்.....?''

லோகநாதனுக்கு முன் நெற்றியில் பொட்டுப் பொட்டாய் வியர்க்கிறது.

''வேண்டாம், என்னே விட்டுடு.... என்னே நம்பி ஒரு பைத்தியக்காரப் பிள்ளேயும், பேச்சு வராத பெண்டாட்டியும் இருக்காங்க. நல்லாயிருக்கிற ஒரே பிள்ளேயோட கல்யாணத்தையும், அவன் மூலமா எனக்குப் பொறக்கிற பேரக் குழந்தையையும் பார்த்துட்டு நான் வந்துடறேன்....''

அவர் கெஞ்சுகிருர். துடிக்கிருர்....

''ஆ.... ஆசை.... ஆசை......

மங்களாம்பாள் கலகலவெனச் சிரிப்பது போல் இருக்கிறது.

திடுக்கிட்டுக் கண் விழிக்கிருர்.

இன்பா தூணுக்குப் பின்னிருந்து சிரித்தபடி எட்டிப் பார்க்கிருள்.

''ஆசை..... ஆசை.....''

லோகநாதனின் உடம்பு முழுவதும் அருவியில் குளித்தாற்போல, வியர்வையில் நனேந்து போகிறது.

இவள் யாரைச் சொல்கிருள்....?

அவர் வேகமாய்த் திரும்பிப் பார்க்க....

தெருக் குழந்தைகளில் நாலேந்து, பூனே மாதிரி காலேப் பதியப் பதிய வைத்து, தூண்களேயும், லோகநாதன் சாய்ந்திருந்த சாய்வு நாற்காலியையும் சுற்றிச் சுற்றி வந்து, இன்பாவைப் பிடிக்க முயல....

அவள் பட்டாம் பூச்சி மாதிரிப் பறக்கிருள். தூணுக்குப் பின் நின்று கலீரெனச் சிரிக்கிருள். யாரோ ஒரு சிறுவன் எட்டிப் பிடிக்கும் முன், கையில் அகப்படாமல் மீன் போல் நழுவுகிருள்...

''மாதா!''

லோகநாதனின் கூச்சலே, அத்தனே தூண்களும் எதிரொலிக்க —

மாதுவுடன், நந்துவும் ஓடி வருகிருன். இன்பா, சிறுவர்களே வெளியே போகும்படி ஜாடை காட்டிவிட்டு ஒன்றுமே தெரியாதவள் போல் நந்துவின் பக்கத்தில் போய் நிற்கிருள்.



''என்னப்பா....''

— இது நந்து.

''கூப்பிட்டீங்களா எசமான்....?''

— இது மாது.

அவர் மகனேயோ, இன்பாவையோ திரும்பிக்கூடப்பார்க்காமல்,மாதையனிடம்எரிந்து விழுகிருர்.

''இந்தப் பன்னுடைகளே எல்லாம் யார் உள்ளே விட்டது?''

மாதையனின் விரல் நுனிகள் மெல்லிய தாய் நடுங்குகின்றன.

''ஏ.... ஏனுங்க, நம்ம எசமானியம்மா தான்.''

''மடையா.... யாருடா எசமானி?''

அப்பாவின் கேள்வி, நந்துவைச் சுருக்கெனக் குத்துகிறது.

இதுஎன்ன,அப்பாஒன்றுமேதெரியாதவர்



போலப் பேசுகிறார்....

அவன் வாய் திறப்பதற்குள் இன்பா, பளிச்செனச் சொல்கிறாள்...

"கொஞ்ச நாளைக்கு வெளியிலே அலையக் கூடாதுன்னு உங்க டாக்டர் சொல்லிட்டார். எனக்கும்தான் பொழுதுபோகவேண்டாமா, அதான், பசங்களை உள்ளே அழைச்சு விளையாடினேன், தப்பா.... மாமா?"

"என்னது?"

மூவர் முகத்திலும் அதிர்ச்சி.

இன்பா, தன் தந்தையை, 'மாமா'வென அழைத்ததில் நந்துவுக்குத் தாங்க முடியாத சந்தோஷத்தைப் பெருக்கெடுக்கச் செய்கிறது. அவன், குறுகுறுவென அவளையே பார்க்கிறான்.

'இத்தனை ஆசையை மனசுக்குள் வைத்துக் கொண்டு, என்னை ஏன் அலைக்கழிக்கிறாய்..?'

அவனது பார்வை, அவளைக் கேள்வி கேட்க...

மாதையனுக்கும், லோகநாதனுக்கும் வேறு மாதிரியான அதிர்ச்சி.....

லோகநாதனை, மங்களாம்பாள், எப்பொழுதாவது 'மாமா' என்றழைப்பது உண்டு.

முறைப்படி பார்க்கப் போனாலும், அவர், அவளுக்கு-தூரத்துத்தாய்மாமன் உறவுதான்.

அவர்கள் குடும்பத்தில், மனைவி, கணவனை 'மாமா' என்று அழைக்கிற வழக்கமும் உண்டு.

மாதையனின், காதுபடவே மங்களாம்பாள் எத்தனையோ தடவைகள் இப்படி அழைத்திருக்கிறாள்....

இவர்களது திகைப்பைத் துளியும் பொருட்படுத்தவில்லை இன்பா.

அவள் பாட்டுக்குச் சொல்லிக் கொண்டே போகிறாள்.

"இந்தக் கல்யாணக் கூடத்தைப் பார்த்தா, குழந்தைங்களுக்கு ஓடிப் பிடிச்ச விளையாட

ணும்னு ஆசை வரும். எனக்கோ, இத்தனே பசங்களேயும் இங்கே வரிசையா உட்கார வச்சுச் சாப்பாடு போடணும் போலத் தோணுது. ஒரு நாளேக்கு அப்படி செய்ய லாமா, மாமா?''

''செய்யலாம் இன்பா. நீ கேட்டு, எது இல்லேயின்னு சொல்லியிருக்காராம் அப்பா. இப்ப நீ வந்து படுத்துக் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்க வா....''

நந்தகுமார், பழைய கோபத்தை மறந்து, அவளே அழைத்துப் போக, அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டு நின்ற மாதையன், தன் எசமானரிடம் சொல்கிருன்:

''ஐயா, இப்போதைக்கு அவங்க சொல்றதுக்கெல்லாம் சரி சரியின்னு தலேயை ஆட்டிடுங்க. அம்மா, இப்படிக் குழந்தைங்களுக்குப் படையல் போட்டாத்தான் தனக்குத் திருப்தியிங்கறதைச் சொல்லாம சொல்ருங்க... ஒரு நாளேக்கு ஊர் பிள்ளேங்களேக் கூப்பிட்டுச் சோறு போட்டுடுங்க...''

''இன்னிக்கு இவ சோறு போடச் சொல்லுவா... நாளேக்கு என்னேத் தூக்குல தொங்கச் சொல்லுவா.... தேவைதாஞ?''

அவர், துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வாசற்பக்கம் நடக்கிருர்.

அவரது குறிப்பை உணர்ந்த மாது, வண்டியைத் தயாராய் வாசலுக்குக் கொண்டு வருகிருன்.

'நேரே ஸ்டேஷனுக்கு விடுப்பா....''

லோகநாதனின் குரலில் அலுப்பு பொங்கி வழிகிறது.

இவர் போன வேளேயில், ஸ்டேஷன் மாஸ்டர், ஸ்டேஷனின் ஓர் ஓரமாய் அமர்ந்து சந்தியாவந்தனம் செய்து கொண்டிருக்கிருர்.

டியூட்டி இல்லே போலிருக்கிறது...

லோகநாதனேப் பார்த்ததுமே, வயிற்றில் பாலே வார்த்தாற் போலிருக்கிறது அவருக்கு.

அவர் பெண்டாட்டிக்கு கர்ப்பப் பையை எடுக்க வேண்டும், கட்டியிருக்கிறது என்று டவுன் டாக்டர் சொல்லிவிட்டார்.

குறைந்தது ஐயாயிரம் வேண்டும்.

'ஏதுடா' என்று கவலேப்பட்டுக் கொண்டிருக்கும்போது, லோகநாதனேக் கண்டால் சந்தோஷமாய் இருக்காதா.....

''வாங்கோ.......''

''உம்ம கிட்ட அவசரமாக் கொஞ்சம் பேசணும்...''

''தெரியுமே, அவசரம்னுத்தான் ஜமீன்தாருக்கு என் ஞாபகமே வரும். சித்த இருங்கோ....''

அவர், ஒரு கையால் மூக்கைப் பிடித்துக் கொண்டு, ஏதோ ஜபித்தவாறு, கீழ் கண்களால் ஜமீன்தாரைப் பார்க்கிருர்.

'இந்த டாக்டர் சொல்றப்பல பெண்டாட்டியைக்கொன்னு, அத்தனே நகையையும் இவன் என்ன பண்ணியிருப்பான்.... எனக்குத் தெரியாம, இந்த ஊரை விட்டு ஒரு காக்கா கூடப் பறந்ததில்லே.....'

லோகநாதன், சிவப்பாய்ப் பூத்து நிற்கும் கல்யாண முருங்கையையே வெறித்தபடி ஸ்டேஷன் பெஞ்சில் உட்கார்ந்திருக்கிருர்.

கல்யாண முருங்கை காற்றில் அசையும் போதுகூட, மங்களாம்பாள் இவரை 'மாமா' என்றழைப்பது போல......!

(தொடரும்)

---



அருள் வாக்கு

**நீ**ங்கள் எல்லாரும் அர்ஜுனர்கள் தான். அவன் மாதிரி விஷாத யோகத்தில் (மனம் குழம்பி) இருப்பவர்கள்தான். அதனுல் அவனேப் போலவே பகவான் சொன்ன யோகங்களில் நீங்களும் போய், கீதையின் கடைசியில் அவன் ஸந்தோஷமாக மனம் ரொம்பி, ''என் புத்தி மயக்கம் போச்சு! ஸந்தேகம் தீர்ந்தது. உன் க்ருபையினுலே ஸரியான ப்ரஜ்ஞை உண்டாகிவிட்டது'' என்று சொன்ன நிலேயை அடைய வேண்டுமென்று க்ருஷ்ண பரமாத்மாவிடம் ப்ரார்த்தனே செய்து கொள்கிறேன்.

இன்றிலிருந்து அஸுர வ்ருத்திகளே ஜயிப்பதற்காகத் தெய்விகமான வ்ருத்திகளே நன்ருகத் திரட்டிக் கொண்டு நிறையக் கர்மாநுஷ்டானம் செய்யவும், பரம எளிமையோடு பரமேச்வரனிடம் பக்தி செலுத்தவும் ஆரம்பியுங்கள். தெய்விகம் உள்பட எந்த வ்ருத்தியும் இல்லாத, சித்தமே இல்லாத சித்ஸ்வரூப ஆத்மா தான் முடிவு என்பதை மறக்காமல் இருங்கள். இப்போது எத்தனே அழுக்குப் போர்வைகளால் அந்த ஆத்மாவை மூடி மறைத்திருந்தாலும் அதுவாகத்தான் எப்போதும் இப்போதும் கூட நாம் இருக்கிரேும் என்ற பாவனேயில் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருங்கள். அப்போதப்போது கார்யங்களுக்கு இடையிலே, கார்யமில்லாத, மஹா பெரிய சாந்தமாய் விரிந்து விசாலமாயிருக்கிற அந்த நம்முடைய ஸ்த்யமான ஸ்வபாவத்தைக் கொஞ்சம் நினேத்துக் கொள்ளப் பாருங்கள். அதுதான் கார்யத்திலே நாம் ஈடுபட்டுள்ள போது நம்முடைய மனஸினுல் ஏற்படக் கூடிய சொந்தப் பற்றுக்களேப் போக்கி, கர்ம பாக்கி ஜாஸ்தியாகாமல் குறைப்பதற்கு உதவி செய்யும்.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# தென்னாட்டில்
# ஓங்கி வளர்ந்துள்ள
# ஸ்ரீராம் குரூப்
# விரைவில் பம்பாயிலும் !

ஸ்ரீராம் நிறுவனம் தமிழகம், கர்நாடகம், ஆந்திரப் பிரதேசம் கேரளம் ஆகிய மாநிலங்களில் மக்களின் நம்பிக்கையையும், ஒருமுகமான ஆதரவையும் பெற்று கடந்த 15 ஆண்டுகளில் உன்னதமான வளர்ச்சியை அடைந்துள்ளது. இந்த வளர்ச்சிக்கு நம்பிக்கை, நாணயம், நிறைந்த அனுபவம், ஒருங்கிணைந்த திறமையான நிர்வாகம், பொருளாதார பலம், ஆகியவையே அடிப்படையாக அமைந்துள்ளன.

- தென்னிந்தியாவில் சிறந்த நிறுவனங்களில் முன்னணியில் உள்ள ஸ்ரீராம் குரூப் கம்பெனிகள் தவணை முறையில் மோட்டார் வாகனங்களை வாங்க ரூபாய் 10 கோடிக்கு மேல் நிதியுதவி அளித்துள்ளன.
- ஸ்ரீராம் குரூப் அங்கத்தினர்களின் எண்ணிக்கை 60,000 க்கு மேல் உயர்ந்துள்ளது.
- ஸ்ரீராம் குரூப் கம்பெனிகளின் நிர்வாகிகள் வங்கி, தொழில் துறை, நிர்வாக ஆலோசனை, போக்குவரத்து, புத்தக வெளியீடு, கட்டிட நிர்மாணம், நிதியுதவி போன்ற பல்வேறு நிதி அபிவிருத்தி துறைகளில் நிறைந்த அனுபவம் கொண்ட நிபுணர்கள்.
- ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட், தமிழ் நாட்டிலேயே தலைசிறந்த சீட்டு நிறுவனமாக வளர்ந்து ஆண்டுதோறும் ரூபாய் 23 கோடிக்கு மேல் பட்டுவாடா செய்கிறது.
- ஸ்ரீராம் குரூப் அலுவலகங்கள், தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகம், கேரளா ஆகிய மாநிலங்களில் உள்ளன.

ஸ்ரீராம் குரூப் கம்பெனிகள் விரைவில் பம்பாயிலும் தம் பணிகளைத் துவக்க இருக்கின்றன. உங்கள் நம்பிக்கையையும், நல்லெண்ணத்தையும் மூலதனமாகக் கொண்டு ஸ்ரீராம் குரூப் நிறுவனங்கள் ஆண்டுதோறும் வளர்ந்து ஆலமரமாக தழைக்க வாழ்த்துங்கள்.






## ஸ்ரீராம்
## குரூப் கம்பெனிகள்

- பதிவு அலுவலகம் :
123, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை 600 001.
போன் : 21401/21402

- தலைமை நிர்வாக அலுவலகம் :
ஸ்ரீராம் ஹவுஸ், 10, கஸ்தூரி எஸ்டேட்,
சென்னை 600 086. போன் : 454805

- கிளைகள் மற்றும் ரெசிடெண்ட் மேனேஜர்கள் :
தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகம், கேரளா, மகாராஷ்டிரா.

ஸ்ரீராம்
உயர்வின் பெருமை
அதன் நிர்வாகத் திறமை.

Please note that we have no corporate relationship with the DCM Shriram Group headquartered at Delhi.

ADWAVE/SGC.3172



வாழ்க்கை வாழ்வதற்கே!

# பணம் பண்ணுவது எப்படி?




வாழ்க்கையை அனுபவிப்பதற்கும் வருவாய்க்கும் சம்பந்தமில்லை என்பதற்குப் பாரதி ஓர் எடுத்துக்காட்டு. கவிஞன் வறுமையால் வாடிய நாட்களே அதிகம். ஆனாலும் அவன் இமயம் முதல் குமரி வரை இந்நாட்டை நேசித்து அனுபவித்துப் பாடியிருக்கிறான். இயற்கையை, இலக்கியத்தை, காதலை, மழலை இன்பத்தை எல்லாம் ரசித்து ரசித்துப் பாடினான். அது லட்சிய உள்ளம்.

சராசரி மனிதர்களுக்கு வாழ்க்கையில் பணம் என்பது பாதுகாப்பு. வறுமைக் கோட்டுக்கு மேலே வாழ்ந்தால் கூடப் போதாது. அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு அதற்கும் மேலே சேமிப்பு என்று கொஞ்சம் இருந்தால்தான் கவலையின்றி வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்க முடியும். பணம் பண்ணுவது எப்படி?

என் நண்பன் ரத்தினத்துக்குக் கல்யாணம் நிச்சயமான சமயம் தன் வருங்கால மாமனாரிடம் இப்படிச் சொன்னான்: "ஸார்! நீங்க கல்யாணத்தை எவ்வளவு சிம்பிளா வேணுமானாலும் நடத்துங்க. கோயில்ல மாலை மாத்திக்கச் சொன்னாலும் தயார். வரதட்சிணையும் கேட்கலே. ஆனா ஒண்ணு. கல்யாணத்துக்குப் பிறகு என் மனைவி சம்பாதிக்கிற பணம் எங்க இருவரையும் சேர்ந்தது. கல்யாணத்துக்கு ஏகமாச் செலவு பண்ணிட்டேன், கடன்பட்டுப் போனேன்னு சொல்லி அவ சம்பளத்தில் பங்கு கேட்காதீங்க."

இந்த வெளிப்படையான பேச்சு அவன் மாமனாருக்கு ரொம்பப் பிடித்திருந்தது. ரத்தினம் கல்யாணத்துக்குப் பிறகு மனைவியிடம் பின் வருமாறு சொன்னான்: "இதோ பார், இன்னும் இரண்டு வருஷங்களுக்கு நான் ஒருவன் மட்டும்தான் சம்பாதிக்கிறதா நினைச்சுக்குவோம். குழந்தைகள் பிறப்பதையும் இரண்டு ஆண்டுகளுக்கு ஒத்திப் போடுவோம். உன் சம்பளம் அப்படியே சேமிப்பாக வேண்டும்." அப்படியே வாழ்ந்தார்கள்.

ஒவ்வொரு மாதமும் ஆயிரம் ரூபாய் 15 சதம் வட்டிக்குக் கம்பெனி டெபாஸிட் செய்தார்கள். கால் ஆண்டுக்கு ஒருமுறை வட்டிப் பணம் வீடு தேடி வருகிறது. மூலதனத்தைத் தொடாமல் இந்த வட்டிப் பணத்தை மட்டும் வைத்துக் கொண்டு ஷேர் மார்க்கெட்டில் இறங்கினான். ஐந்து ஆண்டுகள் சென்று இன்று ரத்தினம் கிட்டத்தட்ட ஒரு லட்சாதிபதி. மனைவி இன்னமும் வேலைக்குப் போகிறாள். இரண்டு குழந்தைகள். முற்றுப் புள்ளி. சந்தோஷமான, நிறைவான வாழ்க்கை.

"ஊம்... எல்லாருக்கும் இப்படி அமைந்து விடுமா? ஒவ்வொருவருக்கும் எத்தனை பிக்கு பிடுங்கல்?" என்று முணுமுணுப்பு எழுவது இயல்பு. ஆனால் பாங்கில் எஸ். பி. அக்கௌண்டில் ஆயிரம் ரூபாய் போட்டு வைப்பதை விட அதையே ஒரு நம்பகமான கம்பெனி அக்கௌண்டில் போட்டு வைத்தால் இரட்டிப்பு வட்டி வரும் என்பது கூடத் தெரியாமல் பலர் இருக்கிறார்கள் — இது விசனத்துக்குரியது. பணம் சோம்பி இருக்கக் கூடாது. அது சுறுசுறுப்பாகக் குட்டி போட்டுக் கொண்டே இருக்க வேண்டும். அதுதான் நமக்கும் நல்லது நாட்டுக்கும் நல்லது. தொழில் வளம் பெருக உதவுகிறோம் என்ற திருப்தியும் இருக்கும்.

அதீத வட்டிக்கு ஆசைப்பட்டு முதலுக்கே மோசமான கதை தெரியாதா? ஷேர் மார்க்கெட்டில் நஷ்டப்பட்டுத் தலையில் கை வைத்துக் கொண்ட நபர்கள் இல்லையா? இருக்கிறார்கள். ஆனால் இவர்கள் விவேகமின்றிக் காரியம் செய்தால்தான் நஷ்டப்பட்டுப் போனார்கள். பணம் பண்ணுவதைக் குதிரை ரேஸ் அல்லது லாட்டரி போல் ஒரு சூதாட்டமாக நடத்தினால் அதிர்ஷ்டத்தைத்தான் முழுக்க முழுக்க நம்ப வேண்டும். புத்திசாலித்தனமாக நடந்து கொண்டால் நிதானமாக முன்னேறினாலும் நிச்சயம் உயரலாம்.

இதுபற்றி சேஷாத்திரி எழுதியுள்ள ஒரு கடிதத்தின் அடிப்படையில் அவர் கதையைப் பிறகு சொல்கிறேன்.

— ஜீவன்

# நேற்று ஹேமா;

# இன்று ரேகா;

• ஹேமமாலினி

• ரேகா

தமிழ்த் திரையுலகில் கொடிகட்டிப் பறந்து விட்டு, பிறகு இந்தித் திரையுலகில் நுழைந்த நடிக, நடிகையர் பலருண்டு.

ஆனால் தமிழ்த்திரையுலகில் நடிக்கவாய்ப் பில்லாமல் ஒதுக்கப்பட்டு, பம்பாய்க்குச் சென்று நடிகையாகி ரசிகர்கள் மனத்தில் 'ட்ரீம் கேர்ல்' (கனவுக் கன்னி) என்று இடம் பிடித்தவர் ஹேமமாலினி ஒருவர்தான். இப் படிப்பட்ட நடிகையை நழுவ விட்டு விட் டோமே என்று முதலில் ஒதுக்கிய இயக்கு னர் ஸ்ரீதர் கூட அடிக்கடி வருத்தப்படுவ துண்டு.

'ஸப்னோன் கா ஸௌதாகர்' என்ற ராஜ் கபூரின் படம்தான் ஹேமாவை வடநாட்டு ரசிகர்களுக்கு அறிமுகப்படுத்தியது. அதன் பின் அடுக்கடுக்காக ஐம்பதுக்கும் மேற்பட்ட படங்களில் நடித்துவிட்டார். முப்பது வயதை தாண்டி, இரண்டு குழந்தைகளுக்குத்தாயாகிய பிறகும் கட்டுக் குலையாத தோற்றத்துடன் இன்றைய பல இளம் நாயகிகளை விட அழ காகத் தோன்றுகிறார்.

தமிழகத்தின் ஸ்ரீரங்கத்திலிருந்து இப்படி ஓர் அகில இந்திய நடிகை கிடைத்திருக்கிறார் என்பது தமிழகத்துக்குப் பெருமைதான் என் றாலும் பல தயாரிப்பாளர்கள் தமிழில் நடிக்க அழைத்தும் நேரமில்லை என்று ஹேமா ஒதுக்கிவிட்டார். ஆரம்பத்தில் நிரா கரிக்கப்பட்டதால் கோபமாய் இருக்குமோ?

ஹேமாவை இன்று தமிழ்நாட்டுடன் இணைக்கும் பாலம் அவர் அம்மா ஜெயா சக்ரவர்த்திதான். இவர் சில இந்தி, தமிழ்ப் படங்களைத்தயாரித்ததோடு 'காதம்பரி' என்ற டப்பிங், ப்ரிவ்யூ தியேட்டரை நடத்தி வரு கிறார்.

இப்போதெல்லாம் ஹேமாவும் தன் தாயாரைச் சந்திக்க மகள் யஷாவுடன் அடிக் கடி சென்னை வருகிறார்.

'சினிமாவுலகில் இளைஞர்களை நம்பி ஏமா

றுவதைவிட திருமணம் ஆன தரம்ஜி போன்ற பொறுப்பு மிக்கவரைத் துணையாக ஏற்றுக் கொள்வது எவ்வளவோ மேல். அதனால் தான் அவரைத் திருமணம் செய்து கொண்டேன்' என்று மனம் திறந்து பேசுகிறார்.

ஜூலை ஐந்தாம் தேதி சனிக்கிழமை மாலை, அவர் முன்னரே தந்த அப்பாயிண்ட்மெண்ட் படி அவரது வீட்டில் அவரைச் சந்தித்த போது... ஓர் இயல்பான சிநேக பாவத்துடன் பேசினார்.

திரை உலகிலே உயர் கதாநாயகியாக மட்டுமின்றி, பரதக் கலையிலும் தேர்ச்சி பெற்று பல அயல்நாடுகளிலும் நிகழ்ச்சிகள் அளித்துள்ளார். வித்வான் பக்கிரிசாமிப் பிள்ளை, திருமதி இந்திரா ஆகியோரிடம் பரதமும், வேம்பட்டி சின்ன சத்யம் அவர்களிடம் குச்சுப்புடியும் கற்று, மோகினி ஆட்டத்திலும் சிறந்து விளங்குகிறார். தற்போது மிகச் சிறந்த கேரக்டர் ரோல்களை மட்டும் தேர்ந்தெடுத்து ஆத்ம திருப்திக்காக மட்டுமே நடிக்க வேண்டும் என்பதே தமது குறிக்கோள் என்கிறார்.

பேச்சுக்கு இடையில் எழுந்து எழுந்து சென்று மகளுக்கு உணவு ஊட்டிவிட்டு வருகிறார். தம் குழந்தைகளுக்காக அழகிய, இனிய எதிர்காலத்தைக் கற்பனையில் கண்டு மகிழும் இவர், கலைகளில் தேர்ச்சி பெற்ற ஆரவாரமில்லாத அமைதியான வாழ்வையே அவர்களுக்குப் படைக்க ஆசைப்படுகிறார்.

தொழிலில் கொண்ட ஆழ்ந்த ஈடுபாடு, அயராத உழைப்பு, இளமைத் தோற்றத்தை நிலைநிறுத்தச் செய்துள்ள உணவுப் பழக்கம், உடற்பயிற்சி, மற்றவர் கருத்தைப் புரிந்து கொண்டு ஏற்றுக் கொள்ளும் மனோபாவம், ஆர்ப்பாட்டமில்லாத அமைதியான குணம் ஆகியவைதான் இவரது வெற்றியின் பின்னணி!

இன்று இந்தி நடிகைகளிலேயே அதிக பட்சத் தொகையை ஊதியமாகப் பெறுபவர் ரேகா. இவர் முப்பது வயதை நெருங்குகிறார் என்றால் நம்புவது கடினம்தான்!

தமிழகத்துக் காதல் மன்னர் ஜெமினி கணேசன் முதலில் ரேகா தன் மகள் என்று ஒப்புக் கொள்ளாவிட்டாலும், அவர் புகழ் பெற ஆரம்பித்ததும் 'ரேகா என் மகள்' என்று பகிரங்கமாய் ஒப்புக் கொண்டார்.

திரையுலகில் முழு வெற்றி பெற்றதற்கு அடையாளமாக அனைத்து முன்னணி நடிகர்களுடனும் இவர் பெயரை இணைத்து கிசுகிசுக்கள் உருவாகியுள்ளன. அமிதாபுக்கும் இவருக்கும் திருப்பதியில் கல்யாணம் நடந்தது என்று பரபரப்பான செய்திகள் அடிபட்டதை இன்னும் திரையுலகு மறக்கவில்லை! திருமணமாகாமலே குழந்தை வேண்டும் என்று பிள்ளை வரம் கேட்கும் இவரைத் திரையுலகம் ஆச்சரியமாகப் பார்க்கிறது!

கிட்டத்தட்ட எழுபதுக்கும் மேலான படங்களை முடித்திருக்கும் இவரும் நன்றாகத் தமிழ் பேசுபவர்தான். 'மீண்டும் கோகிலா' படத்தில் பாதிவரை நடித்துவிட்டு மறுபடியும் பம்பாய்க்கே பறந்து விட்டார்.

# நாளை மீனாட்சி?


மீனாட்சி சேஷாத்திரி

**ஹே**மா, ரேகா போன்று தமிழகத் திரையுலகினரால் ஒதுக்கப்பட்டு இந்தித் திரையுலகில் நடிக்க வராமல் நேரடியாக இந்தித் திரைப்பட உலகிற்கு வந்தார் மீனாட்சி சேஷாத்திரி.

'ஹீரோ' படத்தின் மூலம் இந்தியா முழுவதும் தன் பெயரை நிலைநாட்டியுள்ள இவருக்கு நன்றாகத் தமிழ் பேசத் தெரியும். ஆனால் தமிழ் படிக்கத் தெரியாது! இதுவரை சுமார் ஐந்து படங்களை முடித்துள்ளார். சுமார் இருபது படங்கள் கைவசம் உள்ளன.

இன்று ஒரு படத்திற்கு இவர் கேட்கும் 'ரேட்' பத்து லட்சங்களாம்! சமீபத்தில் சென்னை வந்தபோது 'எனக்குத் தமிழ்ப் படங்களில் நடிக்க ஆசை!' என்று ஆர்வமாகச் சொன்னாராம். ஹேமாவையும் ரேகாவையும் தமிழ்த் திரையில் பார்க்க முடியாவிட்டாலும் மீனாட்சி சேஷாத்திரியைப் பார்க்கலாம் என்று நம்பத் தோன்றுகிறது.

இவரைப் பற்றிய கிசுகிசுக்களும் இன்று ஏராளமாக அடிபடுகின்றன என்பதால் இவரும் முன்னணி நட்சத்திர அந்தஸ்தை எட்டியுள்ளார் என்பது ஊர்ஜிதமாகிறது! அதை எவ்வளவு காலத்திற்குக் காப்பாற்றிக் கொள்வார் என்று பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

— **ஸ்ரீநாத், ஜெயஸ்ரீ ராஜ்**

மேலட்டை வண்ணப்படங்கள்:

(மீனாட்சி) **ஏ. வி. எஸ். வதன்**

(ரேகா) **ஏ. வி. பாஸ்கர்**

* ஆர். மைதீன் பாட்சா, வல்லம்.

? "பல பத்திரிகைகள் விசிறிக் கொள்ள மட்டுமே விற்கப்படுகின்றன" என்று வைரமுத்து கூறியுள்ளாரே?

! இளையராஜாவின்நூல்வெளியீட்டுவிழாவில் அடிகளார் தொடங்கி வைரமுத்து உள்பட அவ்வளவு பேரும் வார்த்தைகளால் அவருக்கு விசிறிய விசிறலில் அந்த ராஜேஸ்வரி கல்யாண மண்டபமே குளிரில் நடுங்கியதே அதை விடவா?

* சைதை வி. முரளி, சென்னை — 15.

? தற்போதைய நிலவரத்தை வைத்துப் பார்க்கும்போதுதமிழகத்தின் அடுத்தமுதல்வராக யார் வரக் கூடும்?

! மக்கள் ஆதரவு யாருக்குக் கிட்டும் என்று யோசித்தால், 'ஜெ' தான். ஜனநாயகத்தில் சர்வ வல்லமை பொருந்தியது வோட்டு பலம்தானே!

* டி. தாமரை பிரபு, குடியாத்தம்.

? ஜெயலலிதாவின் சிறப்புக்குக் காரணம்?

* ரஜினி குமார், சென்னை — 11.

? இந்தி படிக்க விரும்புகிறீர்களா... இல்லை இந்தியராக இருக்க விரும்புகிறீர்களா?

! நானே இந்தி படித்தவன்தான். இந்தியை விரும்பிக் கற்பதற்கு நான் எதிரி அல்ல. மத்தியில் ஆட்சி மொழியாக அதற்கு மட்டும் உயர் அந்தஸ்து தரப்படுவதையும் அதை மட்டும் தேசிய மொழி என்று கருதுவதையும்தான் எதிர்க்கிறேன். இதனால் பிற மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் இரண்டாந்தரப் பிரஜைகளாக்கப் படுகிறார்கள். மறைமுகமான இந்தி திணிப்பை வன்மையாகக் கண்டிக்கிறேன். போதனா மொழியாகத் தாய்மொழியைப் புறக்கணித்து இந்தியைப் போதனா மொழியாக்கப் பார்க்கிற முயற்சியை எதிர்க்கிறேன். இந்தியனாக இருக்க இந்தி படித்தாக வேண்டும் என்ற எண்ணம் அடிமைத்தனமானது. அதை வெறுக்கிறேன். இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களுக்கு ஓர் உயர்வு மனப்பான்மை ஏற்படுவது ஆபத்தானது. எச்சரிக்கிறேன். இதெல்லாம் புரிந்தும் புரியாததுபோல் நடித்துக் குட்டை குழப்பும் இந்தி ஆதரவாளர்களை எண்ணி நகைக்கிறேன்.

# தமிழகத்தின் அடுத்த முதல்வர் யார்?

! இப்போதைக்குப் பால் காவடி ரசிகர்கள்.



* பால் காவடி



* பலத்த காவல்

* க. இளங்கோ, சீர்காழி.

? ரகுமான்கான் எப்படி இருக்கிறார்?

! இன்று மந்திரி வீடுகளில் கூட இல்லாத அளவுக்குப் பத்துப் பதினைந்து போலீஸ்காரர்கள் இரவும் பகலும் ரகுமான் கான் வீட்டைக் காவல் காத்துக் கொண்டிருக்கிறார்கள். உபயம்: தாமரைக்கனி.

* கலைஞர்ப்ரியா, வேலூர் (சேலம்).

? பால் கமிஷன் அறிக்கை வெளியான தற்குக் கலைஞர் மீது வழக்குத் தொடர்ந்த எம். ஜி. ஆருக்கு, ஆளுனர் எழுதிய ரகசியக் கடிதங்கள் இப்போது வெளியாகியிருக்கிறதே. இதுகுறித்து விசாரணை நடத்தத் துணிவு இருக்கிறதா?

! எம்.ஜி. ஆர். நடவடிக்கை எடுக்காததானது. அவரால் நடவடிக்கை எடுக்க முடியாத உயர் மட்டத்தில் கடிதம் 'லீக்' ஆகியுள்ளது என்ற பேச்சுக்கு இடமளித்துள்ளது.

* வி. சின்னத்தம்பி, பள்ளவள்ளி.

? மதுரை மாநாட்டின் போது எம். ஜி. ஆர். படத்தை ரதத்தில் வைத்து இரும்புக் கொக்கிகளால் உடலில் பிணைத்து முதுகில் ரத்தம் கசிய இழுத்து வந்தது பற்றி...?

! கடைந்தெடுத்த முட்டாள்தனம். பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்ததாகக் கூறிக் கொள்ளும் தலைவர்கள், தொண்டர்களிடம் மூட நம்பிக்கைகள் வளர அனுமதித்திருப்பது வெட்கக் கேடு.

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி *

? சீனா மீண்டும் வாலாட்டத் தொடங்கி இருப்பது எதைக் காட்டுகிறது?

! ஏற்கெனவே நமது நாட்டில் ஊடுருவிச் சீனு கைப்பற்றியுள்ள பிரதேசங்கள் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கின்றன. இந்தச் சமயத்தில் புதிதாகக் கொஞ்சம் உட்புகுந்து புதிய பிரதேசங்களுக்கு உரிமை கொண்டாட ஆரம்பிப்பது ஒரு ராஜ



• சன்னியாசிதான்



• விதி





• அறிவு ஜீவிகளின் ......சந்திப்பு

தந்திரம். 'சரி, இந்தப் பகுதியில் என் உரிமையை உனக்காக விட்டுக் கொடுத்துவிடுகிறேன்; அந்தப் பகுதியிலாவது என் உரிமைகளை நீ மதித்து நடந்து கொள்' என்று வாதம் புரிய வசதி. இது போன்ற தந்திரங்களுக்கு எதிராக இந்தியாவும் சாணக்கியம் காட்ட வேண்டும்; அல்லது வாலை ஒட்ட நறுக்கவாவது துணிய வேண்டும்.

• ஜே. பாலச்சந்திரன், நீடாமங்கலம்.

? தமிழ்நாடு அமைச்சரவையில் சன்னியாசி போலச் செயல்படும் அமைச்சர் யார்?

! சன்னியாசி என்றால் எந்த வகை சன்னியாசி? இல்லஸ்டிரேடட் வீக்லியில் சந்திர சுவாமியின் தகிடு தத்தங்களைப் பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறார் பிரிதீஷ் நந்தி. அந்தச் சந்திர சுவாமிகூட சன்னியாசிதான்!

• ஆர். மைதீன் பாட்சா, வல்லம்.

? கமலை சுகாசினி சந்தித்து வருகிறாராமே?

! சந்தித்தால் சந்தித்துவிட்டுப் போகட்டுமே. இரண்டு அறிவு ஜீவிகள் சந்தித்துக் கொள்வதில் உமக்கென்ன ஆட்சேபணை?

• மஞ்சுதேவன், கல்கத்தா.

? வறுத்த முந்திரிப் பருப்பைச் சாப்பிடச் சரியான சூழ்நிலை எது?

! கொஞ்சம் உப்பும் மிளகுத் தூளும் அதில் கலக்க வேண்டும். மழை பெய்தும் பெய்யாமலும் இருக்க, இலேசான குளிர் இதமாக அணைக்க, காரியாலயம் விடுமுறையாக இருந்து கையில் சுவாரஸ்யமான புத்தகமும் கிடைக்க, மணக்கும் காப்பியம் பக்கத்தில் ஒரு கப் ஆவி பறக்க..... இந்தச் சூழலில் முந்திரிப் பருப்பு சுவைக்க முடியாதவர்கள் நிலக் கடலையைக் கூட அதே அளவுக்கு ரசனையுடன் கொரிக்கலாம்.

• ஜெ. முகமது ஃபாருக், நெல்லிக்குப்பம்.

? மாநிலங்களை மொழிவாரியாகப் பிரித்தது தவறு என்று ராஜீவ் கூறியுள்ளாரே?

! ஆமாம். அதைப் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் அது நடந்து முடிந்து போன விஷயம். அதையே நினைத்துப் புலம்பிப் பயனில்லை. இனி மாற்ற முடியாத இந்நிலையில் நாம் ஒருமைப்பாடு காக்க என்னென்ன செய்ய வேண்டும் எதை எதைச் செய்யக் கூடாது என்று சிந்தித்துச் செயல்படுவதுதான் முக்கியம். ஹிந்தி திணிப்பு போன்ற புதிய தவறுகளைச் செய்யாதிருந்தாலே பெரிய விஷயம்!

• செ. அன்புமதியழகன், கொப்பம்பட்டி.

? தமது துறையைச் சரியாக நிர்வகிக்கத் தம்மால் இயலவில்லை என்பதற்குத் தாமே ஒப்புதல் வாக்கு மூலம் அளித்துவிட்டார் எம். ஜி. ஆர். (சுத்த அரசியல் மூலம்) எனவே அவர் பதவியிலிருந்து விலக வேண்டும் என்று எதிர்க்கட்சியினர் போராடினால் என்ன?

! இந்த ஒரு காரணம் மட்டுமல்ல, வேறு பல காரணங்களும் இருக்கின்றன, எம். ஜி. ஆரின் பதவி விலகலைக் கோருவதை நியாயப்படுத்த. இதையெல்லாம் எதிர்க்கட்சியினர், பிரதமர், ஆளுனர் முதலியவர்கள் சிந்திக்காமல் இருக்க மாட்டார்கள். ஆனால் மக்கள் சிந்திக்கிறார்களா? இல்லையே? அது வல்லவா பெரிய சோதனை, முட்டுக்கட்டை எல்லாம்!

• ரூ. 10 பரிசு பெறுபவர்:

இரா. வனேயாபதி,
51, தோட்டக் குறிச்சி (போஸ்டு),
— 639 113.



ஜி. எஸ். பெர்னாண்டோ · ஆதிலட்சுமணன் · என். சி. வெங்கட்ராமன் · என். கிருஷ்ணமூர்த்தி · எஸ். ராமமூர்த்தி

# பம்பாய்த் தமிழர்கள்

**பம்பாய் மாநிலம் குஜராத், மகாராஷ்டிரா என்று இரண்டாகப் பிரிந்த போது தமிழ் அதிகாரிகளை அடைய இரண்டு மாநிலங்களுமே போட்டி போட்டுக் கொண்டன என்பது தமிழர்களுக்குப் பெருமைக்குரிய விஷயமாகும். போலீஸ் துறையிலும் அப்படியே. பம்பாய்த் தமிழர்களின் ஆற்றல், கடமையுணர்வு, நேர்மை ஆகியவற்றுக்கு இதைவிட வேறு சான்று தேவையில்லை. எண்ண முடியாத அத்தகையவர்களில் வண்ணச் சிதறலாகச் சிலரை மட்டும் காண்போம்!**

பம்பாய் நகரின் விசேஷ சட்டம் மற்றும் பராமரிப்பு ஐ.ஜி.யாக பணியாற்றும் டி. ராமச்சந்திரன் திருச்சியைச் சேர்ந்தவர். ஐ.பி.எஸ். பரீட்சையில் தேறியதும் மகாராஷ்டிராவில் போலீஸ் அதிகாரியாக நியமிக்கப்பட்டார்.

''பம்பாயில் குற்றங்கள் அதிகமாக இருக்கின்றனவே'' என்று கேட்டபோது, ''அதிகம் என்று சொல்ல முடியாது. பம்பாய் என்றவுடன் பப்ளிசிடி அதிகம் கிடைத்து விடுகிறது'' என்றார். ''நாளும் மக்கள் பம்பாய்க்கு வந்தபடி இருக்கிறார்கள். அப்படி வருபவர்களில் சிலர் எப்படியும் வாழ்ந்து விடலாம் என்று தங்கள் உடல் வலிமையை மூலதனமாக வைத்துத்திருட்டுத்தொழில்களில் இறங்கி விடுகின்றனர். குற்றவாளிகள் பெருகுவதைத் தடுக்க ஒரே வழி, ஜாமீனில் விடுவதை நிறுத்த வேண்டும். இப்போது ஜாமீன் கொடுப்பது கூட ஒரு வருமானமுள்ள தொழிலாகிப் போய் விட்டிருக்கிறது!''

பம்பாய் போலீஸ் இலாகாவில் வெங்கடாசலம், ராமன், சிவானந்தன், சிங்காரவேலு என்று தமிழ் நாட்டைச் சேர்ந்த பலர் பெரிய அதிகாரிகளாகப் பணியாற்றுகின்றனர்.

* பம்பாய் கார்ப்பரேஷன் கூடுதல் கமிஷனராக இருக்கும் எஸ். ராமமூர்த்தியும் போலீஸ் இலாகாவைச் சார்ந்த ஐ. பி. எஸ். அதிகாரிதான். 29 வருஷங்களாக காவல்துறையில் பணியாற்றிய இவர் இப்போது பம்பாய்க்குப் பெரிய தலைவலியாக விளங்கும் குடிசை ஒழிப்புப் பிரச்னையைக் கவனிக்கிறார். சேரி மக்களுக்கு மாற்றுக் குடியிருப்புக்கள், குடிநீர் வசதி முதலியன வழங்கும் முக்கியப் பொறுப்பில் இருக்கிறார்.

இந்தியாவிலேயே பெரிய கார்ப்பரேஷன், ஒரு மாநில பட்ஜெட்போல ஆண்டுக்கு 750 கோடி ரூபாய் பட்ஜெட் போடுகிற பம்பாய் கார்ப்பரேஷன்தான். ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் சிவசேனாவினர் ராமமூர்த்தி மீது ரொம்ப நம்பிக்கை வைத்துள்ளனர்.

குடிசை ஒழிப்பு பற்றி இவரிடம் கேட்டபோது: "பம்பாய் குடிசை வாசிகள் ஏழைகளல்ல; வருமானம் உள்ளவர்கள். அவர்கள் வேலை செய்யும் பகுதிக்கு பக்கத்திலேயே வசிக்க விரும்புகிறார்கள். அதனால் எப்படிப்பட்ட சூழ்நிலையாக இருந்தாலும் பரவாயில்லை என்று குடிசை போட்டுவிடுகிறார்கள். மக்களுக்கு நல்ல வீடுகளில் வசிக்க வேண்டும் என்ற மனோபாவம் வளர்ந்தால்தான் குடிசை ஒழிப்புப் பணி வெற்றியடையும்."

* சித்தூரைச் சேர்ந்த தமிழரான என். கிருஷ்ணமூர்த்தி பம்பாய் சுங்க இலாகாவின் கூடுதல்கலெக்டராகப்பணியாற்றுகிறார். சில ஆண்டுகள் தில்லியில் பணியாற்றிவிட்டு பம்பாய்க்கு மாற்றப்பட்டார். ''பம்பாய் ஒரு குட்டி இந்தியா. உழைப்பை மூலதனமாக வைத்துப் பிழைப்பவர்கள் அதிகம்'' என்று பம்பாய் மக்களை மனமுவந்து பாராட்டிச் சொல்கிறார் கிருஷ்ணமூர்த்தி.

* மத்திய அரசு இலாகாவாக இயங்கி வந்த டெலிபோன் துறையை பம்பாயிலும் தில்லியிலும் நிஹாம் என்ற பெயரில் சுதந்திரமான பொதுத் துறை நிறுவனமாக மாற்றிவிட்டார்கள். பம்பாய் டெலிபோன்



* கல்கி கண்ணன்



* டி. ராமச்சந்திரன்



* ஜி. சந்திரசேகர்



* வி. ரங்கராஜ்

# வானவில்லின் வண்ணங்கள்!

திஹாம் ஜெனரல் மானேஜராகப் பொறுப்பேற்றவர் என். வி. வேங்கடராமன். மாயவரத்தில் பிறந்த இவர் காரைக்குடியில் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு டெலிபோன் டிபார்ட்மெண்ட்டில் சேர்ந்தார். படிப்படியாகப் பதவி உயர்வு பெற்று இன்று ஜெனரல் மானேஜராகியிருக்கிறார்.

“இந்தியாவிலேயே மிகப் பெரிய' டெலிபோன் அமைப்பு பம்பாயில்தான். ஆறரை லட்சம் டெலிபோன்கள் இன்று இயங்குகின்றன. மேலும் ஒரு லட்சத்து எண்பதாயிரம் டெலிபோன் இணைப்பு கோரி மக்கள் வெயிட்டிங் லிஸ்ட்டில் இருக்கின்றனர்'' என்கிறார்.

'அடேயப்பா!' என்று நாம் கவலைப்பட்டால், 'டோண்ட் ஒர்ரி, நாலு ஆண்டுகளில் பன்னிரண்டு லட்சம் டெலிபோன் இணைப்புகள் இங்கு கிடைக்கும்' என்கிறார் வேங்கடராமன்.

* ரசாயன உரங்களைத் தயாரிக்கும் மிகப் பெரிய தொழிற்சாலையாக விளங்குவது இராஷ்ட்ரிய கெமிக்கல்ஸ் அண்ட் ஃபெர்ட்டிலைஸர் கம்பெனி. இதன் நிதி இயக்குனராகப் பணியாற்றுபவர் ஆர். வெங்கடேசன். மிகப் பெரிய பொறுப்பான பதவியில் இருந்த போதிலும் தமிழ் மொழியில் மிக்க ஆர்வமுடைய இவர் எப்படியோ ஓய்வு ஏற்படுத்திக் கொண்டு' அவ்வப்போது பத்திரிகைகளுக்கு எழுதி வருகிறார்.

* ஆதிலட்சுமணன்: நமது நாடு சுதந்திரம் பெற்ற ஆண்டில் பள்ளிப் படிப்பை முடித்ததும் பம்பாய் வந்து சேர்ந்தவர் இவர். இந்தியன் எக்ஸ்பிரஸில் இரண்டு வருடம் வேலை செய்து கொண்டிருக்கும் போதே பிரிட்டிஷ் கம்பெனியில் வேலை செய்ய வேண்டுமென்ற ஆசையால் காட்பரீஸ் கம்பெனியில் விற்பனை உதவியாளராக வேலைக்குச் சேர்ந்தார். படிப்படியாகத் தம் திறமையால் உயர்ந்து இன்று அந்நிறுவனத்தின் துணைத் தலைவராகத் திகழ்கிறார். 24 லட்சம் விற்பனையில் இருந்த கம்பெனியை 60 கோடிக்கு உயர்த்திய பெருமை இவரைத்தான் சாரும். வேலை செய்து கொண்டே நிர்வாகத் துறையில் தம் அறிவை வளர்த்துக் கொண்ட இவர் இப்போது சில பல்கலைக்கழகங்களுக்குச் சென்று மானேஜ்மெண்ட் பற்றி விரிவுரை தருகிறார். 'சிறந்த எழுத்தாளர், நல்ல பேச்சாளரும் கூட. பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக ஆறு வருடம் இருந்த இவர் இன்று அதன் தர்மகர்த்தாக்களில் ஒருவராக இருந்து வருகிறார். 'இரண்டு மூன்று தலைமுறைகளாக இங்கு வாழும் தமிழர்கள் இருக்கிறார்கள். இங்கு வேலை செய்து ஓய்வு பெற்ற பிறகு தமிழ்நாட்டிற்குத் திரும்பி 'செட்டிலா'க முடியாத நிலை. பம்பாயில் புதிய தலைமுறையோ, தமிழ் மொழியை மறந்து கலாசாரத்தை மறந்து பம்பாய்ச் சூழ்நிலைக்கேற்ப மாறி வருகிறது. இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டுமென்பதே என் விருப்பம்'' என்கிறார் ஆதிலட்சுமணன்.

* உழைப்பினாலும் விடா முயற்சியினாலும் ஃபைசர் கம்பெனியின் டைரக்டர்களில் ஒருவராக உயர்ந்தவர் கே. எஸ். நீலகண்டன். ஃபைசர் கம்பெனியில் பொது மக்கள் பங்குதாரர்களாவதற்கு முதல்தர இடத்தை வகுத்துப் புதிய செயல் முறைகளில் முன்னோடியாக விளங்கியவர். நமது நாட்டில் பொது ஜனத் தொடர்புக்குப் புதிய வடிவம் கொடுத்து அதை நிர்வாகத் துறையில் பயனளிக்கும் கருவியாக மாற்றி அமைத்த நிபுணர். மருந்து தயாரிப்பு கம்பெனிகள் கூட்டமைப்பின் உப தலைவராக விளங்கி அவற்றின் சேவைகளைக் கட்டுரைகள் மூலம் எடுத்துரைத்ததோடு பல தேசியத் தலைவர்களை தொழிற்சாலைகளுக்கே அழைத்துச் சென்று மருந்துக் கம்பெனிகளின் மதிப்பை உயர்த்தியவர். இந்திய மக்கள் தொடர்புக் கழகத்தின் தலைவராக இருந்த சமயம், உலக பப்ளிக் ரிலேஷன்ஸ் மாநாட்டை பம்பாய் நகரில் நடத்தியதோடு பல கல்வி நிலையங்களில் பொது ஜனத் தொடர்பு வகுப்புக்கள் நடத்த ஏற்பாடு செய்தவர்.

* கலர் கெம் கம்பெனி



* கே. எஸ். நீலகண்டன்



* கே. ஆர். வி. சுப்பிரமணியம்



* எஸ். நாராயணசாமி



* எஸ். சீனிவாசன்

யின் நிர்வாக இயக்குனராக கே. ஆர். வி. சுப்பிரமணியம் இருந்து வருகிறார். கோபிசெட்டிப் பாளையத்தைச் சேர்ந்த இவர் சாதாரண நிலையிலிருந்து படிப்படியாக உயர்ந்து இன்று இந்திய ரசாயனப் பொருள்கள் தயாரிப்பாளர்கள் கழகத்தின் தலைவராகவும் இருக்கிறார்.

அவரைச் சந்தித்தபோது 'பிஸினஸ் செய்வதற்கு பம்பாய் வசதியான இடம். உடனுக்குடன் தரப்படும் அரசு அனுமதி தொழிலுக்குக் கைகொடுக்கிறது. மேலும் தொழிற்சாலைகளுக்குத் தேவையான குடிநீர் வசதி, மின்சாரம், அரசாங்க ஆதரவு தடையின்றிக் கிடைக்கிறது. நாட்டிலும் இது போன்ற வசதிகள் கிடைக்க வேண்டுமென்பதே என் விருப்பம்' என்றார்.

* பம்பாயில் அமெரிக்க தூதரகத்தில் டிரேட் ப்ரமோஷன்ஸ் மானேஜர் ஆகப் பணிபுரியும் வி. ரங்கராஜ் இந்திய அமெரிக்க நல்லுறவுக்கும்வர்த்தகமுன்னேற்றத்திற்கும் ஊக்கத்தோடு பணிபுரியும்பொறுப்பில் இருக்கிறார். கலைத்துறையின் ஈடுபாடு காரணமாக நாடகக்குழுக்களையும் நடத்தி வருகிறார்.

* பம்பாய் 'ஏர் இந்தியா'வின் டைரக்டராக விளங்குபவர் எஸ். நாராயணசாமி. தஞ்சாவூரைச் சேர்ந்த இவர் பதினேழு ஆண்டுகளாக ஏர் இந்தியாவில் பெரும் பொறுப்பு வகித்து வருகிறார்.

"பழகிவிட்டால் பம்பாய் எல்லோருக்கும் பிடித்து விடும். கடின உழைப்பும் உண்மையும் உயர்த்தி விடும். பம்பாயில் முன்னேற முடிந்தவன் உலகில் எந்த மூலைக்குச் சென்றாலும் முன்னேறி விடலாம்; பம்பாயில் தப்பான வழிக்குச் சென்றவன் உலகின் எந்த மூலைக்குச் சென்றாலும் திருந்த முடியாது!" என்கிறார் நாராயணசாமி.

* ஸ்டப் கன்சல்டன்ட்ஸ்—கட்டடக் கலை நிறுவனத்தில் சிறப்பு அதிகாரியாகப் பணியாற்றுகிறார் கே.சிவராமன். உலகின் முக்கியமான பல கட்டடங்களும், பாலங்களும் இவர்களுடைய வரைபடத்தின்படியும் இவர்களின் நேரடி மேற்பார்வையிலும் கட்டி முடிக்கப்பட்டுள்ளன.

* வி. சங்கர ஐயர் அண்ட் கோ எனும் புகழ் பெற்ற சார்ட்டர்ட் அக்கவுண்டண்ட் நிறுவனத்தின் பங்குதாரராக விளங்குபவர் எஸ். சீனிவாசன். பம்பாயில் உள்ள நூற்றுக்கு மேற்பட்ட கம்பெனிகளுக்கு ஆடிட்டர்களாக இவர்கள் இருக்கிறார்கள். சங்கர மடம், பாரதி மருத்துவ ஆராய்ச்சி நிலையம் ஆகியவை உருவாவதற்குக் காரணகர்த்தாக்களாக விளங்கியவர்களில் இவரும் ஒருவர்.

"பம்பாய் ஒரு ஜாப் சேலன்ஜ் ஸிட்டி. இங்கு தினந்தோறும் புதுப் புது ஐடியாக்கள் உருவாகின்றன. அதை வெளிப்படுத்துவதற்கான வாய்ப்புகளும் அதிகம். ஆனால் ஒன்று. தனியார் முயற்சி முப்பது சதவீதம் என்றால் ஆண்டவன் அருள் எழுபது சதவீதம்" என்கிறார் இவர்.

* பம்பாய்கிளாக்ஸோ கம்பெனியின் மார்க்கெட்டிங் மானேஜராக விளங்குபவர் ஜி. எஸ். பெர்னாண்டோ. திருநெல்வேலியில் உள்ள இடிந்தகரை என்னும் சிற்றூரில் பிறந்த இவர் தாம்புரம் கிறிஸ்துவக் கலலூரியில் படிப்பை முடித்தார். விடுமுறையில் பம்பாயைச் சுற்றிப் பார்க்க வந்த இவருக்கு நான்கு மொழிகளில் வெளியாகும் ஒரு விவசாயப் பத்திரிகையில் வேலை கிடைத்தது. பின்பு தனியார் விளம்பர நிறுவனமொன்றில் பணிபுரிந்தார். இறுதியாக கிளாக்ஸோ கம்பெனியில் வேலைக்கு சேர்ந்து மார்க்கெட்டிங் மானேஜராகத் திறம்படப் பணிபுரிந்து வருகிறார். உலகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்த இவர் அமெரிக்காவில் உள்ள ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் நிர்வாகத் துறை பயின்றவர்.

* டாட்டா கன்ஸல்டன்ஸியின் டைரக்டராக விளங்குபவர் ஏ.ஆர். ஜகன்னாதன். அமெரிக்காவில் படிக்கும் போதே டாட்டா கம்பெனியின் வேலைக்கான உத்தரவாதத்தோடு பம்பாய் திரும்பினார். கடின உழைப்பும், சுறுசுறுப்பும் நிறைந்த இவர் இன்று இக்கம்பெனியின் வளர்ச்சிக்கு பெரிதும் துணையாக இருக்கிறார்.

* OBMவிளம்பரநிறுவனத்தின் மானேஜிங் டைரக்டர் மணி ஐயர். இரண்டு மாதக் குழந்தையாக இருக்கும் போதே பம்பாய்க்கு வந்தவர். ஆரம்ப காலத்தில் ஃப்ரீ பிரஸ் ஜர்னலில் பத்திரிகையாளராகப் பணிபுரிந்தார். உற்பத்தியாகும் பொருள்களுக்கு விளம்பரம் எவ்வளவு அவசியம் என்பதை நுட்பமாகத் தெரிந்து வைத்திருக்கும் இவர் இத்துறையின் முன்னோடி.

* கல்கி கண்ணன்: எஸ்.எஸ்.எல்.சி. படிப்பை


• மணி ஐயர்


• ஆர். வெங்கடேசன்


• ஏ. ஆர். ஜெகன்னாதன்


• கே. சிவராமன்

முடித்ததுமே கல்கியில் வேலைக்குச் சேர்ந்தார். சதாசிவம் அவர்களின் அறிவுரையின்படி பம்பாய்க்கு வந்து 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' பத்திரிகையில் பிளாக் தயாரிப்புப் பிரிவில் சேர்ந்தார். இன்று ஆனந்த விகடன் பத்திரிகையின் பிரதிநிதியாகவும் இருக்கிறார். பம்பாய்க்கு வரும் தமிழ் நாட்டு வி.ஐ.பி.க்கள் பலர், 'கல்கி கண்ணன் இருக்கிறார்; கவலையில்லை' என்ற நம்பிக்கையோடு வருகிறார்கள். அப்படி ஒரு நல்லுறவுப் பாலமாகவும், பிறருக்கு உதவுவதை ஒரு லட்சியமாகவும் கொண்டவர். இதனால் இவருடைய வீட்டுக்கு விஜயம் செய்யாத தமிழக பம்பாய்ப் பிரமுகர் இல்லை என்றே சொல்லலாம். எம்.ஜி.ஆர். தமிழக முதல்வராவதற்கு முன்பு பம்பாய் வந்தால் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யும் பொறுப்பு இவருடையதுதான். பத்திரிகைத்துறையிலும், விளம்பரத் துறையிலும் ஜாம்பவனாகத் திகழ்கிறார் இவர்.

• இந்திய தாவர எண்ணெய் ஏற்றுமதிக் கழகத்தின் காரியதரிசியாகவும், பிரதம நிர்வாகியாகவும் விளங்கும் எம்.ஏ. பட்டதாரியான ஜி. சந்திரசேகர் கல்வி கற்பதற்கு வரம்பு ஒன்றும் கிடையாது என்று நிரூபிப்பது போல் பல்வேறு பொறுப்புக்களிடையில் இன்று சட்டப்படிப்பு இறுதி ஆண்டு படித்து வருகிறார்.

'கடந்த பதினைந்து வருடங்களாக தமிழ்நாட்டில் மக்கள் தொகைப் பெருக்கத்துக்கு ஏற்ப தொழில் ரீதியான வேலை வாய்ப்புப் பெருகவேயில்லை. தமிழ்நாட்டில் எண்ணெய் வித்துக்களின் உற்பத்தி பெருகுவதற்கும் அது சம்பந்தப்பட்ட தொழில்களுக்கும் அதிக வாய்ப்புக்கள் இருக்கின்றன. இதை உணர்ந்து அரசு செயலாற்றினால் பொருளாதார வளர்ச்சியோடு வேலை வாய்ப்பும் பெருக வழி உள்ளது' என்கிறார் சந்திரசேகர்.

# தமிழக அரசியல் அழைக்கும் பம்பாய்!

‘பிழைக்க வந்த இடத்தில் நமக்கேன் அரசியல்’ என்று ஒதுங்கிக் கொள்பவர்களே அதிகம். ஆனால் பம்பாய்த் தமிழர்கள் அரசியலையும் விட்டு வைக்கவில்லை!

இன்று மகாராஷ்டிரா மாநிலத்தின் வீட்டு வசதி மந்திரியாக இருக்கும் மாண்புமிகு டாக்டர் வி. சுப்பிரமணியம் ஒரு ஐ. ஏ. எஸ். அதிகாரியாக இருந்தவர். மறைந்த பிரதமர் இந்திராகாந்தி சுப்பிரமணியத்தைப் பார்த்து, ‘‘உங்களைப் போன்றவர்களெல்லாம் எங்கள் கட்சியில் சேர்ந்து பணியாற்றினால் கட்சிக்கும் கௌரவம் கிடைக்கும்; மக்களுக்கும் நல்ல தொண்டு கிடைக்கும்’’ என்று சொன்னார்.

அதன் விளைவு, அரசாங்க அதிகாரி பதவியை ராஜினாமா செய்துவிட்டு, காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார். எம். எல். ஏ. ஆனதுமே மாநில வறட்சி நிவாரணப் பணி தலைவர் பொறுப்பு. பின்னர் திட்டக் கமிஷன் தலைவர் பொறுப்பு என்று தேடி வந்தன.

பாபா சாகேப் போஸலே அமைச்சரவையில் நிதி அமைச்சராக வி. சுப்பிரமணியம் பொறுப்பேற்ற போது பட்ஜெட் தாக்கலுக்குப் பின் மராட்டியிலேயே இரண்டு மணி நேரம் பேசி, சட்டசபை உறுப்பினர்களின் கேள்விகளுக்கு மராட்டியிலேயே பதிலளித்திருக்கிறார்.

மறுநாள் பேப்பர்களில், ‘‘பல தொல்லை தரும் வரிகளை விதித்தாலும் அவரது மராட்டி பேச்சும், பதில்களும் அத்தொல்லைகளை மறந்து போகச் செய்துவிட்டன’’ என்று விமரிசனங்கள் வெளிவந்தன!

‘‘இங்கேயுள்ள மத்தியதரத் தமிழர்கள் அரசியலைப் பற்றி அவ்வளவாகக் கவலைப் படுவதில்லை. சொல்லப் போனால் வோட்டுப் போடும் நாளில் வோட்டுப் போடக் கூட வெளியே கிளம்புவதில்லை. அவர்களுக்குத் தங்கள் வாழ்க்கை, குடும்பம், கலை இவை பற்றித்தான் கவலை’’ என்றார் வி. சுப்பிரமணியம். ‘அட, தமிழ்நாட்டில்தான் இப்படி என்றால் பம்பாயிலும் அதே கதைதானா’ என்று நினைத்துக் கொண்டோம்! தமிழ்நாட்டை விட்டுப் பிற மாநிலத்தில் மந்திரியாக இருக்கும் ஒரே தமிழர் டாக்டர் வி. சுப்பிரமணியமாகத்தானிருக்க முடியும்.



• அமைச்சர் வி. சுப்பிரமணியம்

பம்பாய் முனிசிபல் கார்ப்பரேஷனில் இரண்டு தமிழர்கள் நகரத் தந்தைகளாக உள்ளனர்.

‘குட்டித் தமிழ்நாடு’ என்று பெயர் பெற்ற தாராவி பகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டவர், எஸ். கே. ராமசாமி. சென்ற ஆண்டு நடந்த மாநகராட்சித் தேர்தலில் சிவசேனாதான் சூறாவளி வெற்றி பெற்றது. அதிலிருந்து தப்பி, சிவசேனா வேட்பாளரையும் தம் தொகுதியில் தோற்கடித்தவர் இவர். அத்தேர்தலில் மிக அதிகமான வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றவரும் இவரே.

பல காங்கிரஸ் வேட்பாளர்கள் தோல்வியடைந்த இதே மாநகராட்சித் தேர்தலில் சிவசேனாவின் அமோகமான வெற்றிக் கிடையே காட்கோபர் பகுதி 149 வது வார்டிலிருந்து காங்கிரஸ் வேட்பாளர் எஸ். பாலகிருஷ்ணன் வெற்றிபெற முடிந்தது என்றால் அதற்குக் காரணம், அவருடைய பொது நல சேவைதான். முப்பத்து மூன்று வயது இளைஞரான பாலகிருஷ்ணனைச் சமூக விரோதிகள் சிலர் தாக்கிய போதிலும் அதைப் பொருட்படுத்தாமல் ஏழைகளைத் தேடிப் போய் உதவினார் என்பதால் ரொம்ப நல்ல பெயர். டைம்ஸ் ஆஃப் இந்தியா பத்திரிகையில் நிருபராகப் பணியாற்றியபடியே மாநகராட்சி உறுப்பினராகவும் விளங்கி உழைத்து வருகிறார்.



• நகரத் தந்தை எஸ். கே. ராமசுவாமி



• எம். வரதராஜ முதலியார்



• நகரத் தந்தை எஸ். பாலகிருஷ்ணன்

பம்பாய் அரசியல் கட்சிகள் அனைத்திலும் தமிழர்கள் இருக்கிறார்கள். தமிழ்நாட்டில் உள்ள அரசியல் கட்சிகள், அனைத்துக்கும் பம்பாயில் குறிப்பாகத் தாராவியில் கிளைகள் இருக்கின்றன.

அமைப்பு ரீதியாக இயங்குவது பம்பாய் தி. மு. க. கிளை. இவர்கள் 'அண்ணா அறிவாலயம்' என்ற பெயரில் சொந்தக் கட்டடம் வைத்திருக்கின்றனர். 1700 பேர் உறுப்பினர்களாக உள்ள பம்பாய் தி. மு. க. வுக்கு 16 கிளைகள் இருக்கின்றன.

செயலாளர் எஸ். தியாகராசன் நாற்பதாண்டுகளுக்கு முன் வேலை தேடி பம்பாய் வந்தவர். பம்பாய் வாசியாகி விட்ட இவர் தமிழர்களுக்கான பொது நலப் பணிகளிலும் ஈடுபட்டிருக்கிறார்.

அ. தி. மு. க. வின் பம்பாய் அமைப்பாளராக எஸ். டி. முகுந்தன் இருக்கிறார். இவர்களும் அடிக்கடி கூட்டங்கள் நடத்துகின்றனர். தமிழ்நாட்டிலிருந்து வரும் அ.தி.மு.க. பிரமுகர்களுக்கு வரவேற்புக் கொடுத்து உற்சாகப்படுத்துகின்றனர்.

ஆர். ஏ. சுப்பையா தலைமையில் திராவிடர் கழகத்தின் கிளையும் பம்பாயில் இயங்குகிறது. இங்கேயும் கறுப்புச் சட்டை அணிந்து பொதுக் கூட்டங்களில் கலந்து கொள்கிறார்கள். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தையும் பெரியாரின் பிள்ளையார் உடைப்புப் போராட்டத்தையும் பம்பாயில் நடத்திய பெருமை இவர்களுக்கு உண்டு.

அம்பேத்கார் இயக்கத் தலைவரான ஆர். பாலகிருஷ்ணன், எம். எல். ஏ. வாக இருந்தவர். அகில இந்திய ரீதியில் பணியாற்றும் இவர் பம்பாயில் நிறையக் கிளைகளை ஏற்படுத்தி, தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பணியாற்றி வருகிறார்.

தமிழ்நாட்டில்தான் கட்சி அரசியல், ஜாதி என்றால் பம்பாயிலும் கூடவா அது தொடர வேண்டும் என்று அதற்கு முற்றுப் புள்ளி வைக்கும் வகையில் பல தரப்புக் கட்சித் தமிழர்களையும் ஒருங்கிணைத்து 'பம்பாய்த் தமிழர் பேரவை' என்ற அமைப்பை எம். வரதராஜ முதலியார் உருவாக்கினார்.

இந்தப் பேரவை, ஈழத் தமிழர் பிரச்னைக்காக பம்பாயில் நடத்திய தமிழர் பேரணியைக் கண்டு பம்பாய் நகரமே வியந்து நின்றது. இப்பேரவை சொந்த இடம் வாங்கியதோடு, மருத்துவ சிகிச்சைக்காக ஆம்புலன்ஸ் வண்டிகளையும் வாங்கிச் சமுதாயப் பணியாற்ற முற்பட்டது. ஆனால் வரதராஜ முதலியார் மீது பம்பாய் போலீஸ் எடுத்த நடவடிக்கைகள் காரணமாகப் பேரவை இப்போது செயலற்று இருக்கிறது.

பம்பாய்த் தமிழர் பேரவையின் தலைவராக இருக்கும் வெ. ராஜபாண்டியன் மாதுங்கா காய்கறிக் கடையொன்றில் வேலையை ஆரம்பித்தவர். இன்று இரண்டு டெக்ஸ்டைல் மில்களை நடத்தித் தமிழர்களுக்கு வேலை கொடுத்து வருகிறார். விரைவில் பம்பாய்த் தமிழர் பேரவையை இயங்க வைக்க முயற்சி எடுக்கப் போவதாகவும் குறிப்பிட்டார்.

இவர்கள் தவிர தமிழ் மாணவர் மன்றத்தை நிறுவிய இர. ராசாமணி, தத்தா சாமந்தின் காம்கார் அங்காடியில் முக்கிய பொறுப்பிலுள்ள பொ. அப்பாதுரை, தொழிற்சங்கம் அமைத்துப் பாடுபட்டு வரும் வாசுதேவன் முதலியவர்களையும் குறிப்பிட வேண்டும்.

# அமிர்தாஞ்சன் லிமிடெட்

**90 வருடங்களுக்கு மேல் குடும்பங்களில் பயன்பட்டு
வரும் நம்பகமான மருந்துகளைத் தயாரிப்பவர்கள்.**

- **அமிர்தாஞ்சன் பெய்ன் பாம்**
  தலைவலி, வாய்வு பிடிப்பு வலி, சுளுக்கு, தசைவலி முதலியவற்றிற்கு



- **அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட்**
  சொறி சிரங்கு படை முதலிய சரும உபாதைகளுக்கு



- **அமிர்தாஞ்சன் விளக்கெண்ணெய்**
  தூய்மையானது, வாசனை ஏதுமில்லாதது.




- **ஸ்வாஸ் மின்டஸ்**




- **அமிர்தாஞ்சன் இன்ஹேலர்**
  மூக்கடைப்பு, சளி, மூக்கொழுகல், தும்மல், தலைபாரம் முதலியவற்றிற்கு




- **அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸர்**
  குழந்தையின் ஜீரணக் கோளாறு, பல் முளைக்கும்—பொழுது ஏற்படும் உபாதைகள் முதலியவற்றிற்கு



- **ஸலோ:ஃபென் வலி நிவாரண மாத்திரை**
  தலைவலி, ஃபுளு, உடல்வலி, பல்வலி முதலியவற்றிற்கு



- **அனோலியம் கோல்ட் ரப்**
  ஜலதோஷம், இருமலிலிருந்து நிவாரணம் பெற வீரியமுள்ள சக்தி வாய்ந்த மருந்து




**இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் புகழ் பெற்றவை**

**அமிர்தாஞ்சன் லிமிடெட்**
சென்னை - 600 004

கிளைகள்:
பம்பாய், புதுடில்லி, கல்கத்தா ஹைதராபாத், பெங்களூர், காஸியாபாத்.

# பத்திரிகைகளுக்கு ஒரு பட்டியல்; திக்குக்கு ஒரு தமிழ்ச் சங்கம்!

உலகின் எந்தப் பகுதியிலானாலும் சரி, நாலு தமிழர்கள் ஒன்று சேர்ந்தால் மேடை ஏறி முழங்க வசதியாக ஒரு தமிழ்ச் சங்கம் அமைத்துவிடுவார்கள்; அல்லது தங்கள் எழுத்தார்வத்துக்கு வடிகாலாக ஒரு பத்திரிகையாவது ஆரம்பித்து வைப்பார்கள்! பம்பாயும் இந்தப் பொது விதிக்கு விலக்கல்ல.

''சர்வோதயத்தில்'' உதயம் கண்ட பம்பாய்த் தமிழ்ப் பத்திரிகைப் பட்டியல் ''முரசு'' கொட்டி ''விந்திய''த்தில் எதிரொலித்து ''தமிழக''த்தையே ''பம்பாய்''க்குத் தருவிக்க முயன்ற ''தமிழின ஓசை'' யாகத் திகழ்ந்தது.

இன்று இரண்டு தமிழ் தினசரிகள் வெளியாகும் ஒரே வட இந்திய நகர் பம்பாய்தான்: ''மராத்திய முரசு'', ''போல்டு இந்தியா''. பம்பாயிலிருந்து ''தீபாவளி மலர்'' வெளியிட்ட ஒரே பத்திரிகை போல்டு இந்தியா! அதுவும் கல்கி, கலைமகள், அமுதசுரபி சைஸில் அவற்றுடன் போட்டியிடுவது போல்!

பல ஆண்டுகளுக்கு முன் பம்பாய்த் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஒன்று இயங்கி வந்ததை மறவாமல் புதிதாக ஒன்றை முன்நின்று உருவாக்கியிருக்கிறார் போல்டு இந்தியாவை வெளியிடும் துரை ஜெயராஜ். இன்று இச் சங்கத்தில் சேர பம்பாயில் தமிழ் எழுத்தாளர்களுக்குப் பஞ்சமே இல்லை என்றாலும் அவர்கள் பழம் பெரும் ஜாம்பவான்களை எண்ணிப் பார்க்கிறார்கள்: வேதத்தைத் தமிழ்ப் படுத்திய ஜம்புநாதனில் தொடங்கி மாயாவி, சுபஸ்ரீ, கேதாரி, கலைமகளில் நாவல் பரிசு பெற்ற சியாமளா கோபால், இந்திரா போன்ற எண்ணற்றவர்கள். ''மணிக்கொடி'' ''ஸ்டாலின்'' என்ற அடைமொழிகளால் அழைக்கப்பட்ட ஸ்ரீனிவாசனைத்தான் மறக்க முடியுமா? அல்லது அவரது புஷ்டி மீசையைத்தான் மறக்க இயலுமா? அனைவரும் ஏற்கும்படி எழுதி, பேசி வரும் திருக்குறள் முனுசாமியும், இப்போதும் விவாதத்துக்கு உள்ளாகும்விதமாக எழுதி வரும் ஹேமா ஆனந்ததீர்த்தனும் சிலகாலம் முன்பு வரை பம்பாய்த் தமிழ் எழுத்தாளர்களே ''நீறு பூத்த நெருப்பு'', ''வெள்ளிச் சுவர்'' போன்ற நாடகங்களுக்காக வேதராமன் பெருமை பெற்று அந்தத் துறையிலும் பம்பாய் பின்தங்கி விடவில்லை என்று நிரூபித்துள்ளார்.

இளம் தலைமுறையில்: நாஞ்சில் நாடன், கலைக்கூத்தன், பாலகிருஷ்ணன், ஞானபானு, ஜெயகாண்டீபன் போன்ற பெயர்கள் இலக்கிய வட்டத்தில் பிரசித்தம் என்றால் ரா. பத்மநாபன் ஆன்மீக இலக்கியங்களைத் தமிழாக்கம் செய்து பக்தி பரப்பி வருகிறார்.



அமரர் கந்தசாமி

பம்பாயிலுள்ள பலப்பல தமிழ்ச் சங்கங்களுக்கெல்லாம் தாய்ச் சங்கம் ''பம்பாய்த் தமிழ்ச் சங்கம்''தான். நாற்பத்தைந்து ஆண்டு சரித்திரம் பெற்ற இச் சங்கத்துக்குச் சொந்தக் கட்டடமே உண்டு என்றால் அதன் அஸ்திவாரம் கந்தசாமி என்ற உருவில் ''மறைந்து''



* பம்பாய்த் தமிழ்ச் சங்கம்



* த. ஜ. பெரோஸ்.



# பரபரப்பாய் விற்கும் ஒரு புத்தகம்

வெளியான இரண்டே மாதங்களில் ஒரு புத்தகத்தின் அனைத்துப் பிரதிகளும் விற்றுப் போய், இப்போது அதன் நாலாவது பதிப்புக்காகப் புத்தகப் பிரியர்கள் தவம் இருக்கிறார்கள்! இப்படிப்பட்ட நூல் மர்ம நாவலோ, காதல் நவீனமோ அல்ல— சகுந்தலா ஜகந்நாதன் எழுதிய **Hinduism – An Introduction**- என்ற புத்தகம்!

சுற்றுலாத்துறையில் பணியாற்றும் இந்நூலாசிரியரைப் பல வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் ஆதங்கம் பாதித்தது. அந்த ஆதங்கம், இந்து சமயத்தைப் பற்றி ஒவ்வொரு தலைப்பிலும், அதாவது ஞானம், பக்தி, வேதங்கள், உபநிஷத்துக்கள், அத்வைதம், புராணங்களென்று — தனித்தனியே பல நூல்கள் விளக்கினாலும் இவை அத்தனையும் ஒரே நூலில் தெளிவாக விளக்கப்படவில்லையே என்பதுதான். அயல் நாட்டவர் மட்டுமென்ன, நமக்கும்தான் இதுபோன்ற எளிய விளக்கங்களுடன் கூடிய ஒரு நூல் தேவை.

இத்தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் இந்து சமயத்தைப் பற்றிய பல விஷயங்களையும் வரிசைப்படுத்தி, அவற்றின் அர்த்தங்களையும் ஆங்கிலத்தில் எளிய முறையில் அழுத்தமாய் எடுத்துச் சொல்கிறது இந்நூல்.

தீண்டாமை, ஜாதிப் பிரிவு போன்ற தீமைகளைக் களைய அவ்வப்போது தோன்றிய அறிவுச் சுடர்களைப் பற்றிய செய்திகளையும் இதில் தருகிறார் ஆசிரியர்.

ஆங்காங்கே அற்புதமான வண்ணப்படங்களும், அழகான வரைபடங்களும் விளக்கங்களுக்கு உறுதுணையாய் உள்ளன. மிக நேர்த்தியாக அச்சான நூல்; விஷயமும் உயர்வு, புத்தகத்தின் அமைப்பும் உயர்வு; விலையும் அதற்கேற்பத்தான்: ரூ. 70/— வெளியீட்டாளர்கள்: **Vakils, Feffer & Simons,** பம்பாய்—38.

— சரஸ்வதி கிருஷ்ணமூர்த்தி

இருக்கிறது; கட்டடமோ ஆதி லட்சுமணன் என்ற உருவில் உயர்ந்து நிற்கிறது. இங்கு வந்து இவர்கள் உபசரிப்பை ஏற்காத தமிழக அறிஞர்களோ, கலைஞர்களோ, தலைவர்களோ, எழுத்தாளர்களோ கிடையாது. நாடக, நடனக் கலைகளையும் ஊக்குவித்து வருகிறது.

செம்பூர் தமிழ்ச் சங்கமும் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்துக்குத் தான் சளைத்ததல்ல என்று நிரூபிக்கும் வகையில் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றது. இந்தத் தமிழ்ச் சங்கங்கள் மராத்தி மொழி வகுப்புக்களைத் தமிழர்களுக்காக நடத்தி வருவதைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.

கோரேகான் தமிழ்ச் சங்கத்தின் இலக்கிய விழா ஒரு பெரிய கலைவிழா போல மக்களை ஈர்க்கும் சக்தி படைத்தது. கோவண்டி தமிழ்ச் சங்கத்தின் பட்டி மன்றங்கள் சென்னை பாஷையில் கூறுவதானால் 'தூள் கிளப்பும்!'

இன்னும் பாந்திரா தமிழ்ச் சங்கம், சகார் தமிழ்ச் சங்கம், காமராஜ் இலக்கிய மன்றம், அறநெறிக் கழகம், ஜெரிமெரி தமிழ்ச் சங்கம் போன்ற 'வெரிமெனி' சங்கங்கள் பம்பாய்த் தமிழர்களின் தமிழார்வத்துக்கு வடிகாலாக விளங்குகின்றன.

சொற்பொழிவாளர்கள் என்று எடுத்துக் கொண்டால் 'பம்பாய்க் கலைஞர்' என்று போற்றப்படும் பொற்கோவின் பேச்சு அருவி; பம்பாய்த் தமிழ்ச் சங்கம் பாலுவின் பேச்சு ஆறு; ஆதி லட்சுமணனின் பேச்சு ஓவியம்; கமலா சங்கரன் பேச்சு காவியம். நகைச்சுவைக்கு திருமதிகள் பவானி, பாலா.

ஆக மொத்தம் 'பம்பாய்க்குப் போனாலும் பட்டிமன்றம் விடாது' என்ற புது மொழியை உருவாக்கலாம்தான்!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani.
Editor: K. Rajendran.



## இப்போது, லக்ஸையும் விட நான் அதிகம் விரும்பும் சோப் ஒன்று உள்ளது”, என்கிறார் ஸ்ரீதேவி.

# புதிய லக்ஸ்

### நேர்த்தியான புது மணம்

அதன் புத்தம் புது, மலர்களின் சாற்று மணம் பற்றி ஒவ்வொரு சினிமா நட்சத்திரமும், தம் விருப்பமான முறையில் விளக்குகிறா—“மென்மைய மிக்கது”, “கிளர்ச்சியூட்டுவது”.

### கவர்ச்சியான புதுத் தோற்றம்

உங்களைப் போலவே கவர்ச்சியானது நவநாகரீகமானது அது—கண்ணைக் கவர்வதும்கூட! மூன்று வகை அழகிய வண்ணங்களில் கிடைக்கிறது—இளஞ் சிவப்பு, பச்சை மற்றும் மஞ்சள்.












புதிய
**லக்ஸ்**
சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.

# இந்தியாவின் பொருளாதாரத்திற்கு சிறு சிறு துளிகளாக நாங்கள் அளிப்பது பலப்பல கோடிகள்.




பகுதி பகுதியாக ஆவியாக்கி வடிகட்டுவதற்கான பிரம்மாண்டமான நீள் கலங்களிலிருந்து எம்.ஆர்.எல்லில் மிகவும் மதிப்புள்ள பெட்ரோலியப் பொருட்கள் வெளி வந்த வண்ணம் உள்ளன. துளித்துளியாக இவை அளித்த விற்பனை அளவு ரூ. 1,200 கோடிகளையும் தாண்டிவிட்டது.

இந்தியாவின் முதல் ஒருங்கிணைந்த சுத்திகரிப்பு ஆலையான எம்.ஆர்.எல்லில் உற்பத்திச் செலவைக் குறைப்பது முக்கியக் குறிக்கோளாக காணப்படுகிறது. இயற்கை அளிக்கும் விலை மதிப்பற்ற பொக்கிஷமான எண்ணெய் ஒரு துளிகூட விரயமாக்கப்படுவதில்லை.

## இப்பொழுது இரட்டிப்பு வளம்!

விரிவாக்கம் செய்யப்பட்ட புதிய சுத்திகரிப்பு ஆலையுடன் எம்.ஆர்.எல்லின் உற்பத்தி அளவு இரட்டிப்பாகியுள்ளது. அதாவது, ஆண்டுக்கு 56 லட்சம் டன்கள். இன்று, எம்.ஆர்.எல். ஆண்டுக்கு 9,79,000 டன்கள் இலேசான எண்ணெய் வகைகள், 25,50,000 டன்கள் இடைநிலை வடிபொருட்கள் மற்றும் 11,35,000 டன்கள் கனரகப் பெட்ரோலியப் பொருட்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்கிறது. இதன் பலன் அதிக சமையல் எரிவாயு, அதிக மண்ணெண்ணெய், அதிக டீசல் மற்றும் அதிக பெட்ரோல்.

## இவை மட்டுமல்ல இன்னும் பல

நாட்டின் இரண்டாவது மெழுகு ஆலையாக எம்.ஆர்.எல்லின் பாரஃபின் மெழுகுத் தொழிற்சாலை, 20,000 டன்கள் பலதரப்பட்ட மெழுகு வகைகளைத் தயாரிக்கும் ஒரு புரொபிலின் ஆலைத் திட்டம், லீனியர் ஆல்கைல் பென்சீனைத் தயாரிக்க உதவுவதற்கான மூலப் பொருட்களைச் செய்யும் திட்டம் மற்றும் லூப் ஆலை விரிவாக்கத் திட்டம் — இவை.

எம்.ஆர்.எல்லின் பியுடீனியின் திட்டம், நாப்தா உற்பத்தி ஆகியவை மூலம் பயன் பெறும் ரசாயன ரப்பர், அரோமாடிக்ஸ் மற்றும் பிளாஸ்டிக் தொழில்கள் போன்ற இணைத் திட்டங்கள். எம்.ஆர்.எல்லின் எதிர்காலத் திட்டங்கள் உருவெடுக்கும் போது, பெரும் அளவிற்கு ஊக்கம் பெறும்.




நாட்டின் வளத்தைப் பெருக்க உதவும் நேசக்கரம் — எம்.ஆர்.எல்.

**மதராஸ் ரி:பைனரீஸ் லிமிடெட்**

480, அண்ணா சாலை, நந்தனம், சென்னை-600 035.

SAA/MRL/396g